உ

கணபதிதுணை.

சுத்தாத்வைதவேதாந்தாசாரியராகிய
சங்கராசாரிய சுவாமிகள் மரபில்
விநாயகபாரதியார் மாணாக்கர்

# தெய்வநாயகசுவாமிகள்

அருளிச்செய்த

# தசகாரியமகாவாக்கியமும்,

திருத்துருத்தி இந்திரபீடம்

## கரபாத்திரசுவாமிகளாதீனம்

## பிறைசை - அருணாசலசுவாமிகள்

இயற்றிய உரையும்.

---

இவை
ஷை சுவாமிகள் மாணாக்கர்
ஈசூர் - சச்சிதானந்தசுவாமிகளின்
தருமபரிபாலன சபையாருத்திரவின்படி
காரியதரிசி
ப. முத்துகிருஷ்ண ரெட்டியாரவர்களால்
சென்னை:
மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டன.

---

இரண்டாம்பதிப்பு.
1897.

# புத்தகவிளம்பரம்.

| | ரூ | அ. |
|---|---|---|
| பிரபுலிங்கலீலை உரையுடன் ... ... ... | 2 | 8 |
| கைவல்லிய நவநீத விருத்தியுரை ... ... | 1 | 4 |
| வேதாந்த சூளாமணி விருத்தியுரை (2வது பதிப்பு ... | 1 | 4 |
| ஷை திக்காகிதம் ... ஷை ... | 1 | 8 |
| தத்துவநிஜாநுபோகசாரம் ... ... ... | 1 | 0 |
| வாசுதேவமனனம் ... ... ... | 0 | 14 |
| சர்வமதசித்தாந்த விளக்கவினாவிடை ... ... | 0 | 12 |
| திருக்குதிருசிய விவேகம் உரையுடன் ... ... | 0 | 12 |
| உத்தமவாதம் ... ... ... | 0 | 10 |
| ஷை காலிகோ பயிண்டு ... ... ... | 0 | 12 |
| பிரத்தியட்சாநுபூதிவிளக்கம் ... ... ... | 0 | 8 |
| ஷை காலிகோ பயிண்டு ... ... ... | 0 | 10 |
| வேதாந்த இலக்கணம் ... ... ... | 0 | 8 |
| சசிவர்ணபோதம் உரையுடன் .. ... | 0 | 8 |
| தசகாரியமகாவாக்கியம் உரையுடன் (2-வது பதிப்பு) | 0 | 8 |
| ஜீவகாருண்ய விளக்கம், சுவாநுபூதிவிளக்கம் ... | 0 | 6 |
| சொரூபசாரம் உரையுடன் ... ... | 0 | 6 |
| சத்தப்பிரகரணம் ... ... ... | 0 | 6 |
| உபநிடத விருத்தியுரை ... ... ... | 0 | 5 |
| எதார்த்தவாதம் ... ... ... | 0 | 4 |
| ஞானவாசிட்டத்திரட்டு ... ... .. | 0 | 3 |
| சுகர் கைவல்லியம் ... ... .. | 0 | 2 |

விற்கிறவர்:
ப. முத்துகிருஷ்ணரெட்டியார்,
55, விஜயதீர்த்தமுதலி தெரு,
புரசைவாக்கம், சென்னை.

வெளிநாட்டார் V. P Post மூலமா யிவரிடம் பெற்றுக் கொள்ளலாம்.

கரூர்-சச்சிதானந்தசுவாமிகள்
தருமபரிபாலன சபையார் உத்தரவின்படி,
ப. முத்துகிருஷ்ணரெட்டியார்,
காரியதரிசி.

சென்னை
டிசம்பர்மீ
1897வ

உ

சிவமயம்.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

## நேரிசையாசிரியப்பா.

### ஈசூர் - சச்சிதானந்தசுவாமிகள்

இ ய ற் றி ய து.

---

உலகெனும் பொருளை யுற்றுண ராத
பலசம யத்தரும் பற்பல வாகத்
தத்த மதிகொடு சாற்றிய மறைக
ளுத்திக் கொவ்வா துளற லாகலிற்
காரண காரியங் கற்பனை யுண்மை
பூருவசித் தாந்தப் புணர்ப்பெனு மிவற்று
ளெம்மதப் புரட்டையு மிகலற நூறிச்
சம்மத வாக்கியந் தானிதென் றுணர
வேத மாதா விளம்பிய நான்மொழி
யாதி யாரிய மாதலிற் றென்னூற்
றசமகா வாக்கியந் தப்பற வாக்கினன்
நிசவனு பூதி நீங்காச் சங்கர
மரபினன் கணபதி மாபா ரதியடி
திரமுறப் பெற்ற தெய்வ நாயகன்
செப்புமிந் நூற்குரை செய்தனர் சிலருந்
தப்பில தாகத் தங்கட் கியையினு
முத்தி யனுபவத் தொத்ததன் றாதலி
னத்திறத் தோரு மிஃதே சரியென்
றொப்ப வியற்றின னுய்த்துணர்ந் துரையைச்
செப்பிலத் துவிதஞ் சீர்பெற நாட்டிய

# உரைச்சிறப்புப்பாயிரம்.

சங்கரன் மரபைச் சார்ந்தநல் லிந்திர
துங்க பீடத் தொல்கர பாத்திர
வடிகளா தீனத் தமைந்துறை சையில்வாழ்
மடமை யெலாங்கட மாவரு ணாசல
தேசிக னருளைச் செவ்வியி னடைந்து
மாசயி ரகல் வாசிட்ட மாதி
நூலுரை செய்தவ னுண்ணிய வறிவன்
மேலுயர் மாளிகை மேவிய பிறைசைப்
பதியி லெவர்க்கும் பக்குவ முணர்ந்து
பதிபசு பாசப் பற்றறச் செய்பவ
னொருமொழி யாலெனை யுண்டவன்
திருவரு ணாசல தேசிகன் றனே.

உ

குருமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தசகாரிய மகாவாக்கியம்.

(அவதாரிகை.)

வடநூலார்க்கே யுரித்தாகிய வேத ரகசியங்களினால் தாம பெற்ற நிரதிசயானந்தப் பேற்றைத் தென்னூலாரும் அனுபவித்து அவர்களும் நித்திய திருத்தியை யடையக் கருணையினாற் செய்விப்பான் கருதி, அந் நூலாசிரியரே யிந் நூலாசிரியராய் அவதரித்து மகா வாக்கியார்த்தங்களின் இரகசியங்களைக் கூறும் வட மொழிகளைப் பெயர்த்து, தென் மொழியில் தசகாரிய மகாவாக்கியமெனக் கூறத்தொடங்கிய இந்நூல் நிர்விக்கினமாய் நிறைவேறும்பொருட்டு, தாம் வழிபடு கடவுளாகியும், சர்வபரிபூரணமாகியும், ஜீவேசுவர சகங்களின் யதார்த்த சொரூபமாகியும், சமஸ்த மதஸ்தர்களும் வணங்குங் கடவுளர்க்குங் கடவுளாகியும், சசாதி விசாதி சுகதபேதரகிதமாகியும், தானே தானாக விருக்கும் இந்நா லபிப்பிராய மாகியும் விளங்குகின்ற பரவஸ்துவை யெல்லாமா யல்லவுமா யென்ற வாக்கியப்படி இச்செய்யுளில் அகோசரமாகவுங் கோசரமாகவுக் குறிக்கின்றார்.

### கலி.

உலகமுதற்பொருளையும்பர்க்குணர்வரிதாம்பொருளை
 யோதியவேதாகமத்தினுச்சியினுட்பொருளைப்
பலகலையின்பொருண்முடிவின்முடிவாயபொருளைப்
 பற்றறப்பற்றியபெரியோர்பரவியவான்பொருளை
யலைதிவலைநுரைகடலினுதித்தொடுங்குமாபோ
 லகிலாண்டமுதித்தொடுங்குமதன்மூலப்பொருளை
யிலகியசற்குருவாகியாளுகும்பொருளை
 யெங்குமாம்பரம்பொருளையாமும்வணங்குதுமே.

(இதன்பொருள்.) உலகம் - உலகங்களுண்டாவதற்கு, முதற்பொருளை - முன்னுள்ள வஸ்துவை, உம்பர்க்கு - தேவர்களுக்கு, உணர் வரிதாம் பொருளை - அறிதற் கரிய வஸ்துவை, ஓதிய - ஈசுரனாற் சொல்லிய, வேதாகமத்தின் - வேதாகமங்களின், உச்சியினுட் பொருளை - முடியி னுள்ள வஸ்துவை, பல கலையின் - பல சாத்திரங்களின்து, பொருள் - அருத்தங்களின், முடிவின் முடிவாய பொருளை - முடிவிற்கும் முடிவாகிய வஸ்துவை, பற்றறப் பற்றிய - பற்றுமறப் பற்றிய, பெரியோர் - மகத்துக்கள், பரவிய - துதிக்கப்பட்ட, வான் பொருளை - மேலான வஸ்துவை, அலை திவலை நுரை - திரை துளி நுரைகளானவை, கடலின் - சமுத்திரத்தில், உதித்தொடுங்குமாபோல் - உற்பத்திலயமாவதுபோல, அகிலாண்டம் - சமஸ்த அண்டங்களும், உதித் தொடுங்கு மதன் - தோன்றி யழிவதற்கு, மூலப்பொருளை - காரணமாகிய வஸ்துவை, இல

கிய - விளங்கிய, சற் குருவாகி - ஞானசாரியராகியும், யானும் - யானுகியுமிருக்கின்ற, பொருளை - வஸ்து வை, எங்குமாம் - எவ்விடத்தும் பூரணமாகிய, பரம் பொருளை - பிரம வஸ்துவை, யாமும் வணங்குதும் - யாமும் வணங்குவாம் என்றவாறு. ஏகாரம் ஈற்றசை.

யானென்பது சீடனெனக் கொள்க. யானென்னுந் தன்மை யொருமை அகம் பாவம் நீங்கும் உயர்வுபற்றி யாமென்னுந் தன்மைப் பன்மையாய் வந்தது. சர்வ மும் விளங்குதற்கு ஆதாரமும் அதன் நோக்கின்படி யாமும் நிகழ்தற் பாலது மாகலின், அனைவரும் வண ங்குதற்குரிய பர வஸ்துவை யாமும் வணங்குதுமென இறந்ததுதழீஇய வெச்சவும்மையாகக் கூறினர்.

(பதசாரம்.) சிருட்டிக்குமுன் சத்தா மாத்திரமா யிருந்த தென்பார் உலக முதற் பொருளை யெனவும், அஃது சிந்தனுதீதமாய்த் தானே தானுக விளங்குவ தென்பார் உம்பர்க் குணர்வரிதாம் பொருளை யென வும், அஃது மகாவாக்கியார்த்த அபிப்பிராய மென்பார் வேதாகமத்தி னுச்சியி னுட் பொருளை யெனவும், அது சர்வார்த்த நிச்சயங்களுக்கு அதீதமென்பார் பல கலை யின் பொருண் முடிவின் முடிவாய பொருளை யென வும், அது நினையாமல் நினைக்குந் தன்மையோர் துதித் தற்குரிய தென்பார் பற்றறப் பற்றிய பெரியோர் பர விய வான்பொருளை யெனவும், அது சகலமுந் தோற் றன்மாத்திரமாய்த் தோன்றி மறைதற்கு ஆதாரமாகி

ச் சிற்பிரகாசத்திற்குக் காரண மென்பார் அகிலாண்ட மூதித்தொடுங்கும் அதன் மூலப் பொருளை யெனவும் அது நித்தியானந்தமாகத் தடித்த தென்பார் சற்குரு வாகி யெனவும், அதுவே பிரக்ஞை யாயிற் றென்பா யாளுரும் பொருளை யெனவும், அதுவே ஜீவேசுவர சகத் தென்னும் யாவுமாய் விளங்கிற் றென்பார் எங்குமாட பரம்பொருளை யெனவும், அதுவே மகத்துக்கள் தானு ப் போற்றற் கியைந்தது போல யாமும் போற்று கியைந்த தென்பார் யாமும் வணங்குது மெனவு கூறினார்.

(இதன்றாற்பரியம்.) பிரம வஸ்துவை யதீதமா வுஞ் சச்சிதானந்தமாகவுந் துதிசெய்ததென்பதாம்.

(அ. கை.)

இங்ஙனம் விளங்கிய பிரமவஸ்துவே படிவங்கொண் டெழுந்தருளிய அருளிறை வணக்கக் கூறுகின்றார்.

கவி.

இருவிழிகளுலகறிந்துந்தனையறியாததுபோ
லியானறியும்பொருளலதிங்கெனையறியாமையிற்ற
கருவிடைபுக்கின்பதுன்பக்கடலிடையேசுழன்று
கண்கலக்கப்படுவேலைகருணைவிழியதனு
லருவினைகளறநோக்கியாணவமேபோக்கி
யகமகமென்றிருந்தவெலாமறிவுகொடேநீக்கிப்
பருவமறிந்ததக்ஷணத்தைச்சிக்கற்பனைகள்யாவும்
பாழாக்கித்தருங்குரும்பரகுருவைப்பணிவாம்.

(இ - ள்.) இரு விழிகள் - இரண்டு கண்கள், உலகறிந்தும் - சகங்களை யறிந்தும், தனை யறியாதது போல் - தன்னைத் தெரியாததுபோல, யானறியும் பொருளலது - என்னாலறியப் படுவதையன்றி, இங்கு - இவ்விடத்தில், எனை யறியாமையினால் - என்னையறிவு வடிவா யுணராமையினால், கருவிடைபுக்கு - கருப்பத்திற் புகுந்து, இன்பதுன்பம் - சுக துக்கமயமான, கடலிடையே சுழன்று - பவ சமுத்திரத்தி லுழன்று, கண் கலக்கப்படு வேலை - கண்கலக்கப் படுகின்ற அவசரத்தில், கருணை விழியதனால் - கிருபா நோக்கத்தினால், அருவினைக ளற - கெடுதற்கரிய வினைகள் நீங்கும்படி, நோக்கி-பார்த்து, ஆணவமே போக்கி-அஞ்ஞானத்தைக்கெடுத்து, அகமகமென்றிருந்த - நானானென்றிருந்த, எலாம் - அனைத்தையும், அறிவுகொடே நீக்கி - ஞானத்தைக் கொண்டு கெடுத்து, பருவமதில் - அப்பருவத்தில், பதந் தாக்கி - திருவடிசூட்டி, கற்பனைகள் யாவும் - கற்பனைகள் அனைத்தையும், பாழாக்கி - சூனியமாக்கி, தானாக்கும் - தன்மயமாக்கிய, பரகுருவை, பரமகுருவை, பணிவாம் - வணங்குவாம் எ. று.

அறிவு தன்னால் அறியப்படுவதை யறிதலன்றித் தன்னை யறியாமையின் இங்ஙன முரை கொண்டாம். இன்பதுன்பமென்றது கடலென்னின் பவக்கடலென்றோம்.

(ப - ம்.) யான் அனைத்தையும் அறியும் அறிவாயிருந்தும் அங்ஙனம் விளங்கு மென்னைக் காணவில்லை

யென்பார் யானறியும் பொருளலதிங்கெனை யறியாமை யினு லெனவும், அங்ஙனங் காணுமையினுல் அவ்வறி யாமையிற் கட்டுண்டு அதனுல் ஆபாசமாகத் தோற்றிய அநாத்மாக்களை யாத்மா வெனக் கருதும் நீனை வுண் டாகி, அவை தோற்றுமிடத்துச் சுகம்போலவும் மறை யு மிடத்துத் துன்பம் போலவுங் *காண்டற் கேதுவா யுள்ள சனன மரணங்களிற் சுழன்றே னென்பார் கரு விடைபுக் கின்ப துன்பக் கடலிடையே சுழன்றென வும், இங்ஙனம் அறிவு கலங்குஞ் சமயத்தில் அதுவும் மித்தையென்றறிவித்து அவற்றிற் சுழலாது அசைவற நிறுத்தற்குக் கிருபாநோக்கம் வைத்தா ரென்பார் கரு ணை விழி யதனுல் அருவினைக ளற நோக்கி யெனவும், அங்ஙனம் மறந்த மறதியைக் காண்கின்ற அனுபூதி யைக் கொண்டு நீக்கினு ரென்பார் ஆணவமே போக்கி யெனவும், அதனுற் றேன்றிய அநாத்மாக்களை யானெ ன்ப தின்றி யவற்றை விளக்கும் அறிவைக் கொண்டு அவைகளைப் போக்கினு ரென்பார் அகம் அகமென்றிரு ந்தவெலாம் அறிவுகொடே நீக்கி யெனவும், அங்ஙனம் நீக்கியவிடத்து ஆனந்தம் உதயமாயிற்றென்பார் பருவ மதிற் பதந் தாக்கி யெனவும், அவ்விடத்திற் சகல கற் பனையும் நீங்கிற் றென்பார் கற்பனைகள் யாவும் பாழா க்கி யெனவும், அவ்விடத்திற் சகலமுந் தன தானந்த ரூபமாய் விளக்கிய தென்பார் தானுக்கு மெனவும், இங் ஙனம் விளக்கிய தன்னைத் துதிப்பா மென்பார் பரகுரு வைப் பணிவாமெனவுங் கூறினர்.

(இ - ம்.) தன்னிடத் துளதாய தன்னைத் தானாக விளக்கிய சற்குருவைத் துதி செய்ததாம். (உ)

(அ. கை.)

பர குருவைப் பணிந்து கூறும் இந்நூலுக்கு இச் செய்யுளில் அவை யடக்கங் கூறுகின்றார்.

கவி.

முன்புசெய்த தவப்பயனான் மூதறிவின்பயனான்
முன்னுரைத்த பன்னூலின் முறைதெரிந்தபயனா
லன்புசெய்து சற்குருவினருள்படைத்தபயனா
லடைந்தவர்செய்தொழில்காட்டு மறிவிலியேபோலத்
தன்புதல்வர்க் கிரங்கியதா யெனவுலகோர்க் கெல்லாஞ்
சங்கரசற்குருவருள்வேதாந்தநன்னூற்பொருளை
வன்புகொடுதமிழ்போலுந்தமியேன்புன்கவியால்
வகுத்துரைப்பேனெனத்துணிந்தவாய்மதர்ப்புமிதுவே.

(இ - ள்.) முன்புசெய்த-முன்சனனங்களிற் செய்த, தவப்பயனால் - தபோ பலத்தினாலும், மூதறிவின் பயனால் - விவேகஞானப் பிரயோசனத்தினாலும், முன்னுரைத்த பன்னூலின் - முன்னுண்டா யிருக்கின்ற பலசாத்திரங்களின், முறைதெரிந்தபயனால்-முறைமை யறிந்த பலத்தினாலும், அன்புசெய்து - அன்புவைத்து, சற்குருவின் - ஞானாசாரியரின், அருள் படைத்த பயனால் - கிருபையைப் பெற்ற பலத்தினாலும், அடைந்தவர் - சமாதியைப் பெற்றவர்கள், செய் தொழில் - சகச நிட்டையின் செயலை, காட்டும் - காண்பிக்கத் துணிந்த, அறிவிலியேபோல - மூடனைப்போல, தன்

புதல்வர்க்கு - தனது புத்திரர்க்கு, இரங்கியதாயென - இரக்க முற்ற அன்னையைப் போல, உலகோர்க் கெல்லாம் - உலகின்க ணுள்ள முமூட்சுக்க ளனைவர்க்கும், சங்கர சற்குருவருள் - சங்கராசாரிய சுவாமிக ளருளிய, வேதாந்த நன்னூற் பொருளை - உபநிடதார்த்தத்தை, வன்புகொடு - வன்மைக்கொண்டு, தமியேன் - எளியேன், தமிழ்போலும் - தமிழ்போல இருக்கின்ற, புன்கவியால் - புன்பாவினால், வகுத்துரைப்பே னெனத்துணிந்த - பகுத்துச் சொல்வேனெனத் துணிந்த, வாய் மதர்ப்பும் - வாய்க்கொழுப்பும், இதுவே - இந்நூலேயாம் எ. று.

அடைந்தவரென்பதனாற் சமாதியும், செய்தொழிலென்பதனாற் சகசமும் வருவிக்கப்பட்டன.

(ப - ம்.) நிட்காம புண்ணிய பலத்தினால் விவேக ஞான முண்டாமென்பார் முன்பு செய்த தவப்பயனான் மூதறி வெனவும், அப்பகுத் தறியும் அறி வுண்டான பலத்தினாற் சகல சாத்திரங்களு முண்டான தன்மை தெரியு மென்பார் மூதறிவின் பயனான் முன்னுரைத்த பன்னூலின் முறை தெரிந்த தெனவும், பன்னூலின் முறை தெரிந்த பலத்தினாற் றன்னைத் தெரிவிக்கும் ஞானசாரியரிடத்து அன்புண்டா மென்பார் பன்னூலின் முறைதெரிந்தபயனால் அன்புசெய்து சற்குருவினெனவும், சற்குருவினிடத்தன்பு செய்த பலத்தினால் அவரருளுண்டாமென்பார் சற்குருவின் அருள் படை

த்த வெனவும், அவ்வருளைப்பெற்ற பலத்தினுற் சமாதி யுண்டா மென்பார் பயனுல் அடைந்தவ ரெனவும், அச்சமாதியைப் பெற்றவர்கள் சகச நிட்டையே சாட் சாத்கார மென்பார் அடைந்தவர் செய் தொழி லென வும், அவ்விடத்திற் காண்பானுங் காண்பனவு மின் மையை யங்ஙனங் காட்டத் துணிதல் அறி வின்மை யென்பார் காட்டும் அறிவிலி யெனவும், அறிதற் கரிய அவாங் மனோகோசரமாகிய மகா வாக்கியார்த்தங்களைக் கிருபையினுல் ஆசாரிய சுவாமிக ளென்னும் ஞான தேசிகர் தன்மயமாயிருந்துணர்த்தினதை யங்ஙனமின் றிய யான் கூறிய வாய் மதம் இந்நூ லென்பார் சங்கர சற்குரு வருள் வேதாந்த நன்னூற் பொருளை வகுத் துரைப்பேமெனத் துணிந்த வாய் மதர்ப்பும் இதுவே யெனவுங் கூறினர். வாய் மத மென்றது தான் கருதிச் சொல்லாமல் வாயே சொன்னதென வரும்*; அங்ஙனம் வரின், பெரியோர்க ளேலார் ; அங்ஙனம ஏலாராயின், இந்நூல் நிஷ்ப்ரயோசன மாம் ; ஆதலால் அங்ஙனங் கொள்ளாது தத்துவத்தின் வலிமையினுற் கூறியதென வும் அறிதற்கரிய சகச நிட்டையை யறிவிக்கத் துணிந் தது அறியாமை யாயினும் இது சகச நிட்டை யென் றறிவியாமல் அறியக்கூடாமையின் தனக்குத் தானே யறிவிப்பதுந் தானே யறிவதும் அனுபவமா யிருந் துரைத்தல்போல இந்நூலை யுரைத்ததெனவுங்கொள்க.

(இ - ம்.) தான்கூறுது சிவந்தானயிருந்து கூறிய தென்பதாம். (௫.)

பாயிரமுற்றிற்று.

---

(அ. கை.)

இந்நூல் கூறுவான் றொடங்கி யிதற்கு அதிகாரியான சீடன் ஞானபாவத்திற்கு வரும் மரபை யிச்செய்யுளிற் கூறுகின்றார்.

(வேறு.) கவி.

சற்குருவினருளாலுந்தவமுடிவின்பயனாலுஞ் சனனநீங்கிச்
சிற்கனவாழ்வடைவதற்கேசிந்தைசெயுந்திறமுடையார் சீலராகி
நிற்குநிலைசாதனங்களொருநான்குமறைநான்கு நீந்தியோக
வற்கமொடுசகலகலைகளுந்தேர்ந்துஞானநெறி வருவராமால்.

(இ. ள்.) சற்குருவினருளாலும் - ஞானாசாரியர் கிருபையினாலும், தவமுடிவின் பயனாலும் - தவந் தவறுமற் செய்து முடிந்த பலத்தினாலும், சனன நீங்கி - பவத் துன்பம் நீங்கி, சிற்கன வாழ்வு - பூரண ஞானச் செல்வத்தை, அடைவதற்கே - பெறுவதற்கே, சிந்தை செயும் - சிந்திக்கின்ற, திறமுடையார் - திறத்தையுடையவர்கள், சீலராகி - நல்லறிவுள்ளவராகி, நிற்கு நிலை - அப்பியாசிக்கும் நிலையாகிய, சாதனங்களொரு நான்கும் - சாதன சதுஷ்டயங்களையும், மறை நான்கும் - வேதம் நான்கையும், நீந்தி - ஆராய்ந் தறிந் தகன்று, யோகவர்க்கமொடு - யோகமுதலிய முக்கூட்டங்களுடன், சகல கலைகளும் - சகல சாத்திரங்களையும்,

தேர்ந்து-விசாரித்து அதன் அபிப்பிராயங்களைக் கண்டு, ஞானநெறிவருவராம் - ஞானமார்க்கத்துக்கு வருவார் களாம் எ. று. ஆல் அசை.

நிஷ்காம தபோ பலத்தினாற் சனனமரணந் துன்ப மெனத் தோன்றும்; அங்ஙனந் தோன்றவே, சற் குரு கடாக்ஷ முண்டாகும்; அஃதுண்டாகவே, சிற்சுக வாழ் வைப் பெறக் கருத் துண்டாகும்; அஃ துண்டாகவே, சாதன சதுஷ்டயம் நிறைந்து அதீதமாம்; அஃது அதீத மாகவே, நான்கு வேதங்கள் முதலிய சகல சாத்திரார் த்தங்களின் அபிப்பிராயந் தோன்றும்; அஃது தோன்ற வே, பூருவ பக்ஷமா யுரைக்கின்ற சரியை கிரியை யோக மென்னும் மூன்று பாதங்களும் நீங்கும்; அவை நீங்கவே, மேலான ஞானபதத்திற்கு வருவாரென்பார் இங்ஙனங் கூறினர்.

(இ. ம.) பிரதமத்திற் சீடனுக்கு இயல்பா யுண் டாகுந் தன்மைகளைக் கூறியதாம். (ச)

(அ. கை.)

இத்தன்மையுள்ள சீடனுக்கே மகாவாக்கியார்த் தம் உபதேசிக்கவேண்டுமென் றிச்செய்யுளிற் கூறுகி ன்றார்.

கவி.

இப்படியேசாதனமுமன் பும்வணக்சமுஞான
வியல்பும்பூண்டிங்
கெப்படியாகிலும்பிறவாதிறவாமுத்தி
யிச்சித்தார்க்கியல்பதாகச்

செப்பவல்லமகாவாக்கியத்திறமிதனை
யுலகோர்க்காய்ச்செப்பினேமன்
றப்படியோர்சீடனுக்குச்சங்கராசாரியரன்
றறைந்ததாமால்.

(இ - ள்.) இப்படியே - இவ்வண்ணமே, சாதன மும் - ஞானப்பியாசமும், அன்பும் - ஆசிரியரிடத்தன்பும், வணக்கமும் - வணங்குதலும், ஞானவியல்பும் - ஆத்மவிசாரஞ்செய்யுந் தன்மையும், பூண்டு - தரித்து, இங்கு - இவ்விடத்தில், எப்படி யாகிலும் - எவ்வண் ணமாயினும், பிறவாதிறவா-ஆதியந்தமில்லாத, முத்தி மோக்ஷத்தை, இச்சித்தார்க்கு- விரும்பினவர்களுக்கு இயல்பதாக - சுபாவமாக, செப்பவல்ல - சொல்லத்த குந்த, மகாவாக்கியத்திறம் - மகாவாக்கியத்தின் திற மாம். இதனை - இவ்வாக்கியார்த்தத்தை, உலகோர்க்கா ய் - உலகத்தார்க்காய், செப்பினேமன்று - சொன்னோ மல்ல, அப்படி - முன் சொல்லிய வண்ண முள்ள, ஓ சீடனுக்கு - ஒப்பற்ற சீடனுக்கு, சங்கராசாரியர்-சங் ராசாரியசுவாமிகள், அன்றறைந்ததாம் - அப்போ த ளியதாம் எ. று. ஆல் அசை. (ரு

(இ - ம்.) மகா வாக்கியங்களின் அருமையையுட அவைகளை யுபதேசிக்கும்அருமையையுங் கூறினதாட

(அ. கை.)

மகா வாக்கியங்களின் பெருமையையும் அத பிரிவின் தொகையையும் இச்செய்யுளிற் கூறுகின்று

அத்தகைமைபெற்றமகாவாக்கியந்தானேதெனில்வே
　　தாந்தமாகிச்
சுத்தபரிபூரணமுந்தோற்றுசராசரநிலையுந்
　　துணிந்தோர்க்கெல்லாம்
பெற்றமதுநீங்குகையும்பெறும்பேறு
　　முரைக்கும்ரகசியப்பேருகு
முத்தரதற்குண்மையுமீரைந்துளதென்
　　றுரைப்பரதை மொழியுங்காலே.

(இ-ள்.) அத்தகைமை பெற்ற - அப்பெருமைமை யடைந்திருக்கின்ற, மகாவாக்கியந்தான் - மகாவாக்கிய மானது, ஏதெனில் - யாதெனில், வேதாந்தமாகி - வேதமுடிவின்க ணுள்ளதாய், சுத்த - பரிசுத்தமாகிய, பரிபூரணமும் - பூரணசொருபத்தையும், தோற்று சரா சரநிலையும் - தோற்றப்பட்ட பாஞ்சபூத பௌதிக நிலை யையும், துணிந்தோர்க்கெல்லாம் - மித்தை யென்று தெளிந்தோ ரனைவர்க்கும், பெத்தமது நீங்குகையும் - அறியாமை நீங்குதலையும் - பெறும்பேறு - அடையத் தக்க ஆத்ம லாபத்தையும், உரைக்கும் - சொல்லும், ரகசியப்பேருகும் - கூடஸ்தமான ஆத்மலாபத்ததாம், முத்தர் - சீவன் முத்தர்கள், அதற்கு - அவ்வாக்கியத் திற்கு, உண்மையும் - உண்மையான பொருளும், ஈரைந்துளதென்று - பத்துள்ளதென்று, உரைப்பர் - சொல்லுவார்கள், அதை - அவ்வாக்கியத்தி னுண்மை யை, மொழியுங்கால் - சொல்லுமிடத்து எ. று. ஏகா ரம் ஈற்றசை.

(இ - ம்.) வெளிப்படை (சு)

(அ. கை.)

அவ்வாக்கியங்களாற் பெறும் பல நன்மைகளில் முக்கியமான தச நன்மைகளின் உண்மையைக் கூற வான்றொடங்கி, அவற்றின் நாமங்களை யிச்செய்யுளில் கூறுகின்றார்.

கவி.

பழமறையினந்த கா வாக்கியங்கணான் கதனுற்
பத்திபேதங்
குழைவுதருமகிமையதன்பிரகாசமஞ்ஞானக்
குடும்பநீக்கந்
தழையுமதற்கவதிபதனிண்ணயம்பெற்றோர்கதைசா
தகர்தியானம்
பிழையிலதனுரைய்வையீரைந்துண்மைய்தனைடைவே
பேசலுற்றாம்.

(இ-ள்) பழமறையினந்தம் - அநாதி சித்தமான நான்குவேதங்களின் முடிவிலுள்ள, மகாவாக்கியங்கள் நான்கு-மகாவாக்கியங்கணான்காம், அதனுற்பத்தி-அவ்வாக்கியங்களின் பிறப்பும், பேதம் - அவை நான்காக வுண்டான பேதமும், குழைவுதரு - குழைவைக் கொடுக்கின்ற, மகிமை - அவைகளின் பெருமையும், அதன் பிரகாசம்-அவைகளின் பிரகாசமும், அஞ்ஞானக் குடும்ப நீக்கம் - அவைகள் அஞ்ஞானமான வுறவை நீக்குதலும், தழையுமதற்கு - தழைத்திருக்கின்ற அவ்வாக்கியங்களுக்கு, அவதி - அளவும், அதனிண்ணயம் -அவைகளி னிருணயமும், பெற்றோர் கதை - அவைகளால

முத்தி யடைந்தோர்கள் காதையும், சாதகர் தியானம்- அவைகளை யப்பி யாசிப்பவர்கள் தியானமும், பிழை யில் - குற்ற மற்ற, அதனுரை - அவ்வாக்கியங்களின் அருத்தமுமாகிய, இவையீரைந்து - இப்பத்தினுடைய, உண்மை - உண்மையை, இதனடைவே - இம்முறை யாக, பேசலுற்றும் - சொல்லலுற்றும் எ. று. அதனெ ன்பது தொகையொருமை.

(இ-ம்.) வெளிப்படை.

(அ.கை.)

மேல்வகுத்த தசகாரியங்களுள் உற்பத்தியை இச் செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

முந்தியவேதோற்பத்திபிரஞ்ஞானம்பிரமமென
மொழியும்வாக்கியஞ்
சிந்தைசெயுமிரண்டிலகம்பிரமாஸ்மியெனும்வாக்கியஞ்
செப்புமூன்றிற்
றந்தொமசியெனும்வாக்கியநாலாவதயமான்மாப்
பிரமமென்ன
வந்தவிந்தவாக்கியந்தானதர்வணத்தினுற்பத்தி
வகுத்தவாறே.

(இ-ள்.) வகுத்தவாறே-முன்னர் வகுத்துக் கூறிய முறையே, முந்திய வேதம் - முதல் வேதத்திலுள்ள, உற்பத்தி - உற்பத்தியாவது, பிரஞ்ஞானம் பிரமமென மொழியும் வாக்கியம் - பிரக்ஞானம் பிரமமெனக் கூற ப்படும் வாக்கியமாம், சிந்தைசெயும் - சிந்திக்கத்தகும்,

இரண்டில் - இரண்டாம் வேதத்திலுள்ள வுற்பத்தியாவது, அகம் பிரமாஸ்மியெனும் வாக்கியம் - அகம் பிரமாஸ்மியெனப்படும் வாக்கியமாம், செப்பும் - விசேடமாகக் கூறத் தகும், மூன்றில் - மூன்றும் வேதத்திலுள்ள வுற்பத்தியாவது, தநதொமசியெனும் வாக்கியம் - தத்தொமசியெனப்படும் வாக்கியமாம், நாலாவது - நாலாவதான, அதர்வணத்திலுற்பத்தி - அதர்வணவேதத்திலுள்ள வுற்பத்தி யாவது, அயமான்மாப் பிரமமென்ன வந்த - அயமான்மாப் பிரமமென வழங்கி வந்த, இந்த வாக்கியந்தான் - இவ்வாக்கியமாம் எ.று.

நாலாவது அதர்வணமென்றமையான் ஏனைய மூன்றும் இருக்கு யசுர் சாமமெனக்கொள்க. உற்பத்தியென்பதை யிரண்டிடத்துச்சொன்னமையான் ஏனைய இரண்டிடத்துங் கொண்டாம். இக்கவி கொண்டு கூட்டுப் பொருள்கோள். தந்தொமசியென்பது எதுகைநோக்கி மெலித்தலாயிற்று.

(இ-ம்.) நான்கு வேதங்களின் முடிவிற் பிறந்த நான்குவாக்கியங்கள் தனித்தனியே பிரமோபதேசமாக நின்று பிரமப்பொருளை யுணர்த்தினும் அங்ஙனம் உணர்த்துமிடத்து மற்ற மூன்று வாக்கியங்களின் அபிப்பிராயத்தின் ஒருமையோடும் உணர்த்தலின், பலசொல் ஒருபொருளைக் காட்டப் பிறந்ததுபோல இந்நான்கும் ஒருபொருளையே யுணர்த்த வுதித்தனவென்பதாம்.

(அ. ௯௪)

பேதத்தை யிச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

பேதமென்ப தாசானுஞ் சீடனுமுத் தரஞானம்
பிரமமென்றார்
யாததுவே தென்றுரைத்தானகமென்றா ரெந்தவக
மென்றான் சீடன்
மாதவனின் றேகமகஞ் சொரூபமக மிரண்டுமல
மற்றுமென்றா
ரேதுவினு லிரண்டுபட்ட தென்றானெல்லாம்பிரம
மென்றாரெங்கோன்.

(இ-ள்.) பேத மென்பது - வாக்கியங்களின் பேத மென்ப தியாதெனில், ஆசானும் - ஆசிரியரும், சீடனும் - மாணாக்கனும், உத்தரம்-பேசுகின்ற விறைவிடைகளாம், ஞானம் பிரம மென்றார் - ஆசிரியர் ஆத்மாவே பிரமமென் றருளினார், யாதது ஏதென்றுரைத்தான் - சீடன் அங்ஙன மாவ தியாதெனக் கேட்டான், அகமென்றார்-ஆசிரியர் அகமென்று கூறினார், சீடன் - டனைவன், எந்த வகமென்றான்-எந்த அகமென்று கட்டான், மாதவன் - ஆசிரியர், நின் றேக மகம் - ன் றேகத்தை நானென்பதும், சொரூப மகம் - சொ பத்தை நானென்பதுமாகிய, இரண்டுமல-இருமையு ன்று, மற்று மென்றார் - அப்பாற் பட்டதா மென் ர், ஏதுவினு லிரண்டுபட்டதென்றான் - சீடன் யாதி லிரண்டு பட்ட தென்று கேட்டான், எங்கோன்

எமதாசிரியர், எல்லாம் பிரமமென்றார் - சர்வமும் பிரம மயமென்றுபதேசித்தார் எ- று.

(ப - ம்.) பொரு ளொன்றைக் கருதி வினவும் விடையுந் தோன்றலின் அப்பொருள் பேதமுஞ் சத்த பேதமுமா மென்பார் பேத மென்பது ஆசானுஞ் சீடனு முத்தர மெனவும் தங்கம் பத்தரைமாற் றென்னுமிடத்தில் தங்கமும் மாற்றும் வேறாகாதொருமை யாய் நிற்பதுபோல ஆசிரியர் ஆத்மாவே சிவமென்பார் ஞானம் பிரமமெனவும், அப்பொருளின் ஒருமை தோன்றாதிரண்டெனக் கருதிச் சீடன் வினவினு னென்பார் யாதது வேதென் றுரைத்தானெனவும்; அவ்வினுவிற்காகப் பிறந்த இரண்டாம் வாக்கியத்தில் ஆத்மாவே பிரமம், பிரமமே யாத்மா ஆதலால் இத்துவிதம் இன்றி யத்துவிதமே தாமாமெனத் தோன்ற ஆசிரியர் அகம் பிரமாஸ்மியென்பார் அகமென்றுரெனவும், அங்ஙனங் கூறும் அகமென்பது தானெனத் தன்மயமாய் இருத்தலின் அப்பொரு டோன்றாது அது நானெனக் கருதி ஆத்மா நாமா? சிவன் நாமா? வெனச் சீடன் வினவினு னென்பார் எந்த அகமென்றான் சீட னென வும், அவ் வினுவிற்காகப் பிறந்த மூன்றும் வாக்கியத் திற் சிவமே யாத்மா வென்னு மிடத்து ஆத்மாவின்று, ஆத்மாவே சிவமென்னுமிடத்துச் சிவம் இன்றாதலால் இவ்விரண்டிற்கும் அதீதமே தாமென் றுதோன்ற ஆசிரியர் தத்தொமசியென்பார் மாதவன் நின் றேக மகம்,

சொரூபம் அகம் இரண்டுமேல, மற்றுமென்றுரெனவும், அங்ஙனங் கூறும் அதீதமே யாவுமாய் விளங்குகின்ற தென்னும் அனுபவந் தோன்றுது அதை வேறெனக் கருதி யிச் சக சீவ பரமெனவும், இதற்கு அதீதமென வும் இரண்டுபட்ட தியாதிஞலெனச் சீடன் விஞவிஞ னென்பார் எதுவிஞல் இரண்டுபட்டதென்று னென வும், இவ்விஞவிற்காகப் பிறந்த நான்காம் வாக்கிய த்தில் ஆத்மாவே பிரமம், பிரமமே யாத்மா வென்னு மிடத்திற் சர்வமுந் தாஞக விளங்குஞ் சுயம் பிரகாச மே நிரதிசயானந்தமெனத் தோன்ற ஆசிரியர் அயமா த்மா பிரம மென்பார் எல்லாம் பிரமமென்றூர் எங் கோன் எனவுங் கூறிஞர்.

(இ - ம்.) இங்ஙனம் வாக்கியங்கள் நான்காக வுண்டான சத்தபேதமும் அவைகளி ஞென்ருக வுண் டான அருத்தத்தின் அபேதமுங் கூறினதாம். (க)

(அ. கை.)

மகிமையை இச்செய்யுளிற் கூறுகின்றூர்.

கவி.

முக்கியமாமகிமைசொலின் முதன்மொழிக்காகாமியம்போ
முடிவுகாணத்
தக்கவிரண்டாமொழியாற் சீவான்மாப்பிரமமதாய்த்
தாஞய்நிற்கு
'மிக்கருமப்படிமூன்ரும் வாக்கியத்தாலென்னதியா
ஞனன்றனீங்கு
மெக்குருகிகாலாம் வாக்கியத்திஞற்சஞ்சிதமூ
நீங்குந்தானே.

(இ - ள்.) முக்கியமா மகிமைசொலின் - வாக்கியங்களின் முக்கியமான பெருமையைக் கூறுமிடத்து, முதன் மொழிக்கு - முதல் வாக்கியத்தினால், ஆகாமியம்போம் - ஆகாமியம் நீங்கும், முடிவு காணத்தக்க - முடிவு தெரியத்தக்க, இரண்டா மொழியால் - இரண்டாம் வாக்கியத்தினால், சீவான்மா - சீவாத்மாவானது, பிரமமதாய் - பரமாத்மாவாகி, தானாய் நிற்கும் - தன்மயமாயிருக்கும், இக்கருமப்படி - இச்செயலின் வண்ணம், மூன்றும் வாக்கியத்தால் - மூன்றுவதான வாக்கியத்தினால், என்னதியா னென்ன னீங்கும் - யானெனதென்கிற அகம் பாவம் நீங்கும், நெக்குருகும் - மனம் மொழிமெய்களுருகாநின்ற, நாலாம்வாக்கியத்தினால் - நான்காவது வாக்கியத்தினால், சஞ்சிதமும் நீங்கும் - சஞ்சிதவினையும் நீங்கும் எ. று.

தான் ஏ இரண்டும் அசைகள்.

(ப - ம்.) முதல் வாக்கியப்படி அறிவு தன்னைச் சுகவடிவாய் அறிந்து மற்றொன்றைச் சுகமாக அறியாமையால் ஆகாமியம் நீங்கிற்றென்பார் முதன் மொழிக்கு ஆகாமியம் போமெனவும், இரண்டாம் வாக்கியப்படி அறிவு சுகத்திற் கரைந்து அதுவாக நிற்றலின் ஆத்மாவே பிரமமென்பார் இரண்டாம் மொழியாற் சீவாத்மாப் பிரமமதாய்த் தானாய் நிற்கு மெனவும், மூன்றும் வாக்கியப்படி சத்தே சித்தாய்ச் சித்தே சத்தாயொன்று பட்டவிடத்து உண்டான ஆனந்தமே தானாய் நிற்றலின்

சதசத்து நீங்கிற் றென்பார் மூன்றும் வாக்கியத்தால் என்னது யான் என்றல் நீங்கு மெனவும், நான்காம் வாக்கியப்படி சிற்சுகாதீதமே தானாய் நிறைந்து நிற்ற லின் பழவினை நீங்கிற்றென்பார் நாலாம் வாக்கியத்தி னாற் சஞ்சிதமும் நீங்குமெனவுங் கூறினார்.

(இ - ம்.) இந்நான்கு வாக்கியங்களால் அகங்கார மமகாரமும் ஆகாமிய சஞ்சிதமும் நீங்குதலையும், ஆத் மா சிவமாயிருத்தலையுங் கூறினதாம். (௧0)

(அ. கை.)

பிரகாசத்தை யிச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

தூயபிரகாசந்தான் முந்தியவாக்கியமதனாற்
றுலங்குஞ்சத்தே
யாயவிரண்டாமொழியாற் சித்துத்தான்பிரகாச
மாகுமூன்றி
லேயதொருவானந்தம் பிரகாசநாலாம்வாக்
கியத்தாலெண்ணி
னேயபரிபூரணந்தான் பிரகாசமெனமறைக
ணிகழ்த்துமாறே.

(இ - ள்.) தூய பிரகாசந்தான் - வாக்கியங்களி னால் விளங்கும் பரிசுத்தமான பிரகாசமான தியாதெ னில், முந்திய வாக்கியமதனால் - முதல் வாக்கியத்தி னால், சத்து - சத்தானது, துலங்கும் - விளங்கும், ஆய விரண்டா மொழியால் - ஆத்ம ரூபமான இரண்

டாம் வாக்கியத்தினல், சித்துத்தான் பிரகாச மாகும் - சித்தானது விளங்கும், மூன்றில் - மூன்றும் வாக்கிய த்தினல், ஏயதொரு வானந்தம் பிரகாசம் - பொருத்த மான ஒப்பற்ற ஆனந்தமானது விளங்கும், நாலாம் வாக்கியத்தால் - நான்காவது வாக்கியத்தினல், எண் ணின் - கருதுமிடத்து, நேய-அன்புருவமான, பரிபூர ணந்தான் பிரகாசமென-பரிபூரண சொரூபம் விளங்கு மென்று, மறைகள் நிகழ்த்துமாறு-வேதங்களுரைக்கு மார்க்கமாம் எ. று.

(ப - ம்.) அறிவா யிருத்தலிற் சத்து விளங்கிற் றென்பார் முந்திய வாக்கியமதனுற் றுலங்குஞ் சத்தே யெனவும், சத்தாய் விளங்குதலிற் சித்து விளங்கிற் றெ ன்பார் இரண்டாம் மொழியாற் சித்துத்தான் பிரகாச மாகு மெனவும், இவ்விரண்டு மொருமைப்பட்ட விட த்தில் ஆனந்தஞ் சுயமாக விளங்கிற்றென்பார் மூன்றி லேயதொருவானந்தம் பிரகாசமெனவும், இவ்வானந்த மே சர்வமாக விளங்கிற்றென்பார் நாலாம் வாக்கியத்தா னேய பரிபூரணந்தான் பிரகாசமெனவுங் கூறினர்.

(இ - ம்.) சச்சிதானந்தப் பிரமம் விளங்குந் தன் மையைக் கூறியதாம். (கக)

(அ. கை.)

அஞ்ஞான நிவர்த்தியை யிச்செய்யுளிற் கூறுகி ன்றார்.

கவி.

மலமாகுமஞ்ஞான நிவர்த்திசொலு மிடத்துமுதல்
வாக்கியத்தாற்
கிலமாகு மாவரண மிரண்டாம் வாக்கியத்தால்
விக்ஷேபம்போகு
நலமாகா வவித்தையொடு மாயையும்போ மூன்றிலப்பா
ஞலாஞ்சொல்லா
லுலகான நாமரூபங்கள் போமெனப்பெரியோ
ருரைப்பர்தாமே.

(இ - ள்.) மல மாகும் - களங்க மாகிய, அஞ்ஞா னம் - அஞ்ஞானத்தின், நிவர்த்தி - வாக்கியங்களினு லுண்டான நீக்கத்தை, சொலு மிடத்து - கூறு மிடத்து, முதல்வாக்கியத்தால் - முந்தின வாக்கியத்தினுல், ஆவரணம் - ஆவரணசத்தி, கிலமாகும் - அழிவாகும், இரண்டாம் வாக்கியத்தால் - இரண்டாம் வாக்கியத்தி னுல், விக்ஷேபம் போகும்-விக்ஷேபசத்தி நீங்கும், மூன் றில் - மூன்றும் வாக்கியத்தினுல், நலமாகா - நன்மை யாகாத, அவித்தையொடு - அவித்தையுடன், மாயை யும் போம்-மாயையும் நீங்கும், அப்பால்-மேல், நாலாஞ் சொல்லால் - நான்காம் வாக்கியத்தினுல், உலகான - சகத்தான, நாம ரூபங்கள் போமென - நாம ரூபங்கள் நீங்குமென்று, பெரியோர் - மகான்கள், உரைப்பர் - சொல்லுவார்கள் எ. று.

தாம் ஏ இரண்டும் அசைகள்.

(ப - ம்.) அறிவு உதயமான விடத்தில் மறைப்பு நீங்கிற் றென்பார் முதல்வாக்கியத்தாற் கிலமாகு மாவரண மெனவும், அவ்வறிவு சிவமான விடத்து அது விடயமாகப் பரிணமித்தல் நீங்குமென்பார் இரண்டாம் வாக்கியத்தால் விக்ஷேபம் போகுமெனவும், அக்கூடஸ்த பிரமம் உதயமான விடத்து அறி வறியாமை நசித்த தென்பார் அவித்தையொடு மாயையும்போ மூன்றிலெனவும், அக்கூடஸ்தப் பிரமாபிக்கமான சச்சிதானந்தப் பிரமமே யனைத்துமாய் விளங்கின தென்பார் நாலாஞ் சொல்லால் உலகான நாமரூபங்கள் போமெனவுங் கூறினார்.

(இ - ம்.) காரணமான தன்னிடத்தில் மித்தையாகத் தோற்றின மாயை அவித்தைகளும் அவைகளின் காரியமான ஆவரண விக்ஷேபங்களும் அதனாற் பரிணமித்த சகத் பேதங்களும் அவ்வனுபவத்தினாற் கெடுந்தன்மையைத் தெரிவித்ததாம். (கஉ)

(அ - கை.)

அவதியை யிச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

அவதிமுதல் வாக்கியத்துக்கவத்தையொரு மூன்றுமறிந்
தப்பானிர்றல்
புவனவாதனைவரினு மிரண்டாற் போக்கிக்கூத்தர்
போற்றுதல்

கவலையின்றி மூன்றும் வாக்கியத்தா லானந்தமெலாங்
கரைகண்டோங்க
றவநெறியானான்கிலெல்லாம் பிரமமென்றே யொத்திருக்
குந்தன்மைத்தாமே.

(இ - ள்.) அவதி - வாக்கியங்களினாலுண்டாகும் அளவு யாதென்னில், முதல் வாக்கியத்துக்கு - மூந்தின வாக்கியத்தினால், அவத்தை - சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி யென்னும், ஒரு மூன்றும் - மூன்றவத்தைகளையும், அறிந்து - கண்டு, அப்பானிற்றல் - விலக்ஷணனாகுதலும், இரண்டால்-இரண்டாம் வாக்கியத்தினால், புவன வாதனைவரினும் - சகத்து வாசனை வந்தாலும், போக்கி - நீக்கி, கூத்தர்போல் - வேடதாரியைப் போல், தானாதல் - தன்மயமாகுதலும், மூன்றும் வாக்கியத்தால் - மூன்றுவது வாக்கியத்தினால், கவலையின்றி-துன்பமின்றி, ஆனந்தமெலாம் - ஆனந்தங்கள் அனைத்தின், கரைகண்டு - முடிவைக்கண்டு, ஓங்கல் - பேரானந்தமாக வளர்தலும், நான்கில் - நான்காம் வாக்கியத்தினால், தவநெறியால் - இத்தவ மார்க்கத்தினால் எல்லாம் பிரமமென்றே - சர்வமும் பிரமமயமென்று, ஒத்திருக்குந் தன்மைத்தாம் - பொருந்தி யிருக்கின்ற தன்மையதுமாம் எ. று.

ஏகாரம் ஈற்றசை.

(ப - ம்.) மூன் றவத்தையுங் கடந்த விடத்துப் பிரத்தி யேகாத்மாவே தானாக விளங்கிற் றென்பார்

முதல்வாக்கியத்துக்கு அவத்தை யொரு மூன்று மறிந்தப்பாணிற்றலெனவும், அவ்வாத்மாவே சிவமா யஃதே யனைத்துமாய் விளையாடி நின்ற தென்பார் புவன வாதனை வரினுமிரண்டாற்போக்கிக் கூத்தர்போற் றானுத லெனவும், அங்ஙனம் விளங்கும் பிரமமே நித்தியானந்தமாக மேலிட்ட தென்பார் மூன்றும் வாக்கியத்தாலானந்த மெலாங் கரை கண்டோங்க லெனவும், அவ்வானந்தத்தில் யாவுங் கரைந் ததுவாகி நிற்குமென்பார் நான்கி லெல்லாம் பிரம மென்றே யொத்திருக்குமெனவுங் கூறினார்.

(இ - ம்.) சிதானந்தப் பிரமமாக விளங்கு மளவு கூறினதாம்.

(அ. கை)

நிண்ணயத்தை யிச்செய்யுளிற் கூறுகின்றார்.

(வேறு.) கவி.

வாக்கியத்தி னிண்ணயங்கள்வகுக்கின்முதற்றரமாம்
வாக்கியநாலாம்வாக்கியவல்லமையேதென்னிற்
றூக்குமொழியத்துவிதமாதலினலிரண்டாந்தரமூன்றும்
வாக்கியமாந்தந்தொமசியதனு
லாக்கியமூன்றுந்தரமாமிரண்டாம்வாக்கியந்தா
னகமென்றே சீடனுரைக்கப்படிகாட்டுதலா
னேக்கியறியாவறிவேபிரமமென்றவதனு
னுண்ணிய நாலாந்தரமாய்நுவலுமுதன்மொழியே.

(இ - ள்.) வாக்கியத்தின் - மகா வாக்கியங்களின், நிண்ணயங்கள் வகுக்கின் - தரங்களைப் பகுத்துக் கூறுமிடத்து, நாலாம் வாக்கிய வல்லமை யேதென்னில் - நான்காம் வாக்கியமான அதர்வண வேதத்தின் வலிமை யாதென்றால், அத்துவிதம் - அத்துவிதத்தை, தாக்கு மொழியாதலினால் - சொல்லுகின்ற வாக்கியமாதலால், வாக்கியம் - அந்நான்காம் வாக்கியமே, முதற்றரமாம் - முதற்றரமாகும், மூன்றாம்வாக்கியம் - மூன்றாவதான சாமவேத மகாவாக்கியம், தத்தொமசி யதனால் - கூடஸ்தப் பிரமாயிக்கமெனப் படுதலால், இரண்டாந் தரமாம் - இரண்டாந்தரமாகும், இரண்டாம்வாக்கியந்தான் - இரண்டாவதான யசுர்வேத மகாவாக்கியமானது, சீடனுரைக்கு - அகம் யாதென்று கேட்ட சீடன் வினவுக்கு, அகமென்றே அப்படிக் காட்டுதலால் - அகம் பிரமமென்றே அவ்வண்ணமே விடையினாற் காண்பித்தலால், ஆக்கிய - ஏற்படுத்திய, மூன்றாந்தரமாம் - மூன்றாவது தரமாம், முதன்மொழி - முதலாவதான இருக்குவேத மகாவாக்கிய மானது, நோக்கி யறியாவறிவே - பார்த் தறியக் கூடாத ஞானமே, பிரம மென்ற வதனால் - பிரமமெனக் கூறிய அதனால், நுண்ணிய நாலாந் தரமாய் நுவலும் - சூட்சுமமான நாலாந்தரமாகச் சொல்லும் எ. று.

ஏகாரம் ஈற்றசை.

(ப - ம்.) அதர்வண வேதத்தில் அத்துவித ஆத்மாவைக் கூறுதலின் முதற்றரமாம் வாக்கியம் நாலாம்

வாக்கிய மெனவும், சாம வேதத்தில் அவ் வத்துவிதங் கூடஸ்தப் பிரமத்தி னொருமைமையெனக் கூறுதலின் இரண்டாந் தரம் மூன்றும் வாக்கிய மெனவும், யசுர் வேதத்திற் கூடஸ்தன் பிரமமாக நிற்றலைக் கூறுதலின் மூன்றாந் தரமாம் இரண்டாம் வாக்கியமெனவும், இருக்கு வேதத்திற் கூடஸ்தனே பிரமமெனக் கூறுதலின் நாலாந் தரமாய் நுவலும் முதன் மொழியே யெனவுங் கூறினர்.

(இ - ம்.) அனுபவ விளைவிற்குத் தருந்த தகைமையைக் குறித்து அவைகளின் றரங்களைப் பகுத்துக் கூறினதாம். (கச)

(அ. கை.)

நான்கு வாக்கியங்களினால் முத்தி பெற்ற நால்வர் காதையும் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

கோதில்கதை முதன்மொழியாற்குச்சரிய நாட்டிற்
 கோவதைசெய்சக்கிலியன்குறைகடவிர்ந்தடைந்தா
னீதியிரண் டாமொழியாற் கருப்பணியே குருவா
 நிசமன்றன் பவமகற்றி நேர்மையில் வீடடைந்தான்
சோதிசெய்மூன் றுமொழியா லஞ்ஞானச் சுதராற்
 றுன்புறவேடுவிச்சிபரசுகமடைந்தாளிவையே
யோதியநாலாமொழியாலந்தணன் செய்வினையா
 லுதவியிலாப் புசிப்புதவ வுயர்ந்தடையுங் கதையே.

(இ - ள்.) கோதில் கதை - வாக்கியங்களினான் முத்திபெற்ற குற்றமற்ற கதைகளியதெனில், முதன்

மொழியால் - மூந்தின வாக்கியத்தினுல், குச்சரியநாட்டில் - குச்சரதேசத்தில், கோவதை செய்-கோஹத்தி செய்யும், சக்கிலியன்-சக்கிலியனுனவன், குறைகடவிர்ந்து - குறைகள் நீங்கி, அடைந்தான் - முத்தியைப் பெற்ருன், நீதி யிரண்டா மொழியால் - நீதியுள்ள இரண்டாம் வாக்கியத்தினுல், கருப்பணியே குருவா - கருப்ப முள்ளவளே யாசிரியராக, நிசிசரன் - அசுரன், தன் பவ மகற்றி-தனது பிறப்பை நீக்கி, நேர்மையில் வீடடைந்தான் - சமானமில்லாத முத்தியைப் பெற்ருன், சோதிசெய் மூன்று மொழியால்-யாவையும் விளக்கஞ் செய்யும் மூன்றும் வாக்கியத்தினுல், அஞ்ஞானச் சுதரால் - அஞ்ஞானமாகிய புத்திரர்களால், துன்புறு வேடுவிச்சி - துன்பமடைகின்ற வேடுவப் பெண்ணுனவள், பர சுகமடைந்தாள் - பிரமசுகத்தைப் பெற்ருள், ஓதிய நாலாமொழியால் - சொல்லப்பட்ட நான்காம் வாக்கியத்தினுல், அந்தணன் - பிராமணன், செய்வினையால் - தான்செய்யும் ஏவற் பணியால், உதவி யிலாப் புசிப் புதவ - தனக் குதவி யிலாப் புசிப்பைக் கழைக் கூத்தி கொடுக்க, உயர்ந்து - அதனுன் ஞானுனுபவத்திற் சிறந்து, அடையுங் கதை-முத்தி யடையுங் கதைகள், இவையே - இவையாம எ. று.

ஏ அசை.

உதவியிலாப் புசிப்பென்றது காதோலை. உயர்ந்தடையு மென்பதனுல் அறிவும் முத்தியும் வருவிக்கப்பட்டன.

(ப - ம்.) ஆத்மாவிற் சிவத்தைத் தரிசித்தபோது அச்சிவம் வெளிப்பட் டதன்பிரகாசமாக ஆத்மா விளங்கப் பிரகாசம் பிரகாசி யென்பது நீங்கி, அத்துவிதமாக நிற்றலின், முதன்மொழியாற் சக்கிலியன் குறைகள் தவிர்ந் தடைந்தா னெனவும், சிந்தன மிறந்த விடத்து உதித்த சிவத்தில் ஆத்மாவைத் தரிசித்தபோது அவ்வவசரம் அவ்விரண்டின் ஒருமையான அத்துவிதமாதலின் நீதி யிரண்டா மொழியாற் கருப்பணியே குருவாம் நிசிசரன்றன் பவ மகற்றி நேர்மையில் வீடடைந்தானெனவும்; சிவமே யாத்மா, ஆத்மாவே சிவமென்னு மிடத்து, அவ்விரண்டும் ஏகமாய்ப் பிரகாசிக்கின்றது அத்துவிதமாதலின் மூன்றுமொழியால் வேடுவிச்சி பரசுக மடைந்தா ளெனவும், அங்ஙனம் விளங்கிய சுயம் பிரகாசமே தானென்னு மிடத்துள்ள அதுவே அத்துவித மாதலின் நாலா மொழியால் அந்தணனடையுங் கதையெனவுங் கூறினர்.

(இ - ம்) நான்கு வேதங்களிற் கூறிய வாக்கியங்களின் அருத்த மொன்றே யாதலின் இந்நான்கு வாக்கிய வுபதேசங்களின் ஒவ்வொன்றினும் ஒவ்வொருவர் முத்தி பெற்ற காரணங்களைக் கூறியதாம். (கரு)

(அ. கை.)

தியானங்களை யிச்செய்யுளிற் கூறுகின்றார்.

கலி.

இந்தவகைப்படியேதியானமுதன்மொழிக்கா
மெந்தைகுருபரத்தியானமிரண்டாம்வாக்கியத்திற்
கந்தமிலாவறிவதுவேதானாகியிருந்தங்
கண்டமெலாம்பிறித்தறிதலனுபூதியதனாற்
றந்தொமசியெனுமொழிக்குத்தக்கதியானந்தான்
றன்னறிவிலகண்டமுந்தானகண்டமுமாயிருத்தல்
கந்தமறநாலாம்வாக்கியத்தியானமகண்டா
காரமாயிருத்தலிவைகைவல்லியத்தியானம்.

(இ - ள்.) இந்த வகைப் படியே-இவ்வித மாகவே, தியானம் - வாக்கியங்களின் தியான மியா தென்னில், முதன்மொழிக்கு - முந்தின வாக்கியத்திற்கு, எந்தை-எமது பிதாவாகிய, குருபரத் தியானம் - குருபரனைத் தியானஞ் செய்தலாம், இரண்டாம் வாக்கியத்திற்கு - இரண்டாம் வாக்கியத்திற்கான தியானம், அந்தமிலா - முடி விறந்த, அறி வதுவே - ஞானமே, தானாகி யிருந்து - தானாயிருந்து, அங்கு - அவ்விடத்து, அண்டமெலாம் - சகல அண்டங்களையும், அனுபூதி யதனால் அனுபவ திருஷ்டியினால், பிறித்தறிதல் - பகுத்தறிதலாம், தந்தொமசியெனு மொழிக்கு - மூன்றும் வாக்கியத்திற்கான, தக்கதியானந்தான்-தகைமையான தியானமானது, தன் னறிவில் - தனது ஞானத்தில், அகண்டமும் - அகண்டாகார மான சிவமும், தானகண்டமும்மாய் - அச்சிவத்திற் றானகண்டமுமாகி, இருத்தல் - கலந்திருத்தலாம், கந்தமற-வாசனாக்ஷயமாக, நாலாம்

வாக்கியத் தியானம் - நான்காம் வாக்கியத்தின் றியான மானது, அகண்டாகாரமா யிருத்தல் - அகண்டானந்த ரூபமாக இருத்தலாம், இவை - இவைகள், கைவல்லி யத் தியானம்-முத்தியை யடைகின்ற தியானங்களாம் எ. று.

(ப - ம்.) அறிவிற் சிவத்தை யறிந்து அது வாத ற்கு அச்சிவாகாரமான குரு கடாக்ஷம் வேண்டுதலின், முதன் மொழிக்கு எந்தை குருபரத் தியான மென வும், அச்சிவ ஞானமே யாத்மாவா யிருந்த விடத்து அனைத்தையுஞ் சின்மாத்திரமாய்ச் சிந்திக்க வேண்டு தலின் இரண்டாம் வாக்கியத்திற்கு அந்தமிலா அறி வதுவே தானாகியிருந்து அங்கு அகண்டமெலாம் பிறி த் தறித லெனவும், சர்வஞ்ஞத்துவ கிஞ்சிஞ்ஞத்துவ மின்றிச் சமத்துவமாவதற்குப் பரிபூரண ஞானமாகச் சிந்திக்க வேண்டுதலின் தந்தொமசியெனு மொழிக்குத் தக்க தியானந்தான் றன்னறிவி லகண்டமுந் தான் அகண்டமுமா யிருத்த லெனவும், இப்பரி பூரணமாத ற்கு வாசனைநீதப்பட்டு நிற்க வேண்டு மாதலிற் கந்த மற நாலாம் வாக்கியத் தியானம் அகண்டாகாரமா யிருத்தலெனவுங் கூறினர்.

(இ - ம்.) உபதேச வாக்கியங்களிற்குத் தகுந்த தியானஞ் செய்யவேண்டு மென்பதாம். (கசு)

(அ. கை.)

நான்கு வாக்கியங்களின் நான்கு பொருளையுங் கூறுவான் றொடங்கி, இருக்கு வேதத்தி லுள்ள பிரக்

ஞானம் பிரம மென்பவற்றுள் ஞானமென்னும் பதப் பொருளான ஆத்மாவின் இலக்கணங் கூறுகின்றார்.

கவி.

ஞானமே பிரமமென்ற முதன்மொழியின் பயன்கே
  ணச்செவிகண் மெய்மூக்கு நயந்தபொறி யதனு
லானசுவையோசையொளிபரிசவாதனையா
  லறிவதுவே ஞானமதன் பிரகாச முரைக்கில்
வானிரவி திங்களங்கி பிரகாச மதினும்
  வல்விழிகள் பிரகாச மனமதிற் பிரகாசந்
தானமுறு சீவனதிற் பிரகாச மதினுந்
  தன்னறிவே பிரகாசத் தானமென வறியே.

(இ - ள்.) ஞானமே - பிரஞ்ஞானமே, பிரமமென்ற - பிரமஸ்வரூப மென்ற, முதன் மொழியின் - முந்தின வாக்கியத்தின், பயன் கேள்-பொருளைக் கேள், நா - நாவும், செவி - செவியும், கண் - கண்ணும், மெய் - மெய்யும், மூக்கு - மூக்குமாகிய, நயந்தபொறி யதனுல் - ஞானேந்திரியங்களினுல், ஆன-உண்டான, சுவை - சுவையும், ஓசை - ஓசையும், ஒளி - ரூபமும், பரிசம் - பரிசமும், வாதனையால் - வாசனையு மாகிய விஷயங்களை, அறிவதுவே - அறிகின்றதுவே, ஞானம் - ஞானமாம், அதன் - அந்தஞானத்தின், பிரகாச முரைக்கில் - பிரகாசத்தைச் சொல்லில், வானிரவி-மேலான சூரியனும், திங்கள் - சந்திரனும், அங்கி - அக்கினியும், பிரகாசம் - உலகத்திற் பிரகாசமாம், அதினும் - அவைகளினும், வல் விழிகள் பிரகாசம் - வலிய கண்

கள் பிரகாசமாம், மனம் - மனமானது, அதிற் பிர காசம் - அக்கண்களினும் பிரகாசமாம், தான முறு சீவன் - இவற்றைச் சார்ந்திருக்குஞ் சீவன், அதிற் பிரகாசம் - அம்மனதினும் பிரகாசமாம், அதினும் - அச்சீவனிலும், தன்னறிவே - தனது ஞானமே, பிர காசத்தானமெனா - இப்பிரகாசங்களுக் கெல்லாம் இரு ப்பிடமென்று, அறி - அறிவாய் எ. று.

ஏ அசை.

செங்கதிரோன் முதற் சீவ பரியந்த முள்ள பிர காச தாரதம்மியங்களைக் காண்பித்தது அவை யனைத் தும் ஆத்ம ஞானப் பிரகாசமென விளக்கற்கு.

(ப - ம்.) விடயங்களைச் சாமானியமாக நின்று அறி பொறி யிடமாகநின்று அறியும் இந்திரியங்களும் அவ்விந்திரியங்க ளிடமாக நின்று விடயங்களைப் பகுத் தறியு மனமும், அம்மனத்தினிடமாக நின்று அவ்விட யங்களைச் சுகமாகவுந் துக்கமாகவும் அனுபவிக்குஞ் சீவனும் நீங்கி யவ்விடத்திற் றெரிவுமாத்திரமாக விள ங்குஞ் சாக்ஷியே கூடத்தனென்பார் நா, செவி, கண், மெய், மூக்கு நயந்த பொறியதனாலான சுவை யோசை யொளி பரிச வாதனையால் அறிவதுவே ஞான மெனவும், அச்சீவன் முதலிய அனைத்தும் ஒன்றற்கொன்று உயர்வு தாழ்வாக அவ்வியாபகத்து ஏகதேசத்தில் விள ங்குவதற்கு ஆதாரமாவதே யாத்ம ஞானப் பிரகாச

மென்பார் தன்னறிவே பிரகாசத்தானமென அறி யெனவுங் கூறினார். (௧௭)

(அ. சை.)

இதுவுமது.

கவி.

அவ்வறிவை யறிவிக்கும் வகையுரைக்கி லுடலே
யறிவாகு மெனிற்பொறிக ளைந்துமிலா தறியா
கவ்வியவிந் திரியந்தா னறிவானு லந்தக்
கரணமிலா தறியாதக் கரண மறிவென்று
லெவ்விடயந் தானறிந்துந் தனையறியா ததனை
யெழிற்சீவ னுட்டுவிக்குஞ் சீவ னறிவென்றால்
வவ்வியதா னல்லாத வெல்லாந்தா னென்றே
யயங்குமதைப் பகுத்தறிய வந்தவறி வதுவே.

(இ - ள்.) அவ்வறிவை - அந்த ஞானத்தை, அறிவிக்கும் - தெரிவிக்கும், வகையுரைக்கில் - வகையைச் சொல்லுமிடத்தில், உடலே யறிவாகுமெனில் - இத்தேகமே ஞானமாகு மென்றால், பொறிக ளைந்துமிலாது - இந்திரியங்க ளைந்து மில்லாமல், அறியா - அறியமாட்டாது, கவ்விய விந்திரியந்தான் - தேகத்தைப் பற்றி யறிந்த இந்திரியமானது, அறிவானல் - ஞானமானல், அந்தக்கரணமிலாது - அந்தக்கரணமில்லாமல், அறியாது - அறியமாட்டாது, அக்கரண மறிவென்றல் - அக்கரணம் ஞானமென்றால், எவ்விடயம் - அந்த விடயங்களையும், தானறிந்துந் தனையறியாது -

தானறிந்துந் தன்னை யறியமாட்டாது, அதனை - அக்கரணத்தை, எழிற் சீவனூட்டுவிக்கும் - அழகிய சீவன்றெரிவிக்கும், சீவன் அறிவென்றால் - அச்சீவனை ஞானமென்றால், வவ்விய - பற்றிய, தானல்லாதவெல்லாம் - தானல்லாத அனைத்தையும், தானென்றே மயங்கும்-தானென்று மயங்கும், அதை - அச்சீவனை, பகுத்தறி வந்த அறிவு - பகுத்துணர்தற் குண்டான சாக்ஷிஞானமே, அறிவுஞானமாம் எ-று.

ஏகாரம் ஈற்றசை.

தேகமுதற் சீவபரியந்தமுள்ள அறிவைப் பிரித்து அவை சடமெனவும், இவ்வறிவைச் சாக்ஷியெனவும் அனுபவமாகக் காண்பதற்கு இங்ஙனங் கூறப்பட்டன.

(இவ்விரண்டு கவியின் தாற்பரியம்) பிரஞ்ஞானம் இனையதெனவும், பிரஞ்ஞானப்போலி யஃதல்லவெனவுங் கூறியதாம். (கஅ)

(அ. கை.)

மற்றைய பிரமமென்னும் பதப்பொருளான பரன் இலக்கணம் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

இக்கிலையேஞானமென்றபதத்தினுண்மையுரைத்தே
மினிப்பிரமமென்றபதத்திலக்கணங்கேண்மாணு
மன்னுபிரமாதிபலவுயிர்களுக்குமுயிராய்
மற்றதனைப்படைத்தளித்துமாற்றுதற்கேதுவுமாய்த்

துன்னுபரிபூரணமாயிருப்பதெதுவதுவாந்
  தூயபதமிரண்டினுக்குஞ்சோதியொன்றாகையினா
னன்னிலையே நமதிடத்தி லறிவுமது வெனலான்
  ஞானமே பிரமமென நவின்றதுவாக்கியமே.

(இ - ள்.) இந்நிலையே - இந்நிச்சயமே, ஞானமென்ற - ஞானமென்று கூறிய, பதத்தினுண்மை - பதத்தினுண்மையை, உரைத்தோம் - சொன்னோம், மாணா - மாணாக்கனே, இனிப் பிரமமென்ற பதத்து, மேல் பிரமமென்று கூறிய பதத்தினது, இலக்கணங் கேள் - இலக்கணத்தைக் கேட்பாய், மன்னு பிரமாதி - நிலைபெற்றிருக்கின்ற பிரமன் முதலிய, பலவுயிர்களுக்கு முயிராய் - பல வகை யுயிர்களுக்கு முயிராகியும் மற்றதனை - அச்சீவர்களை, படைத்து - சிருட்டித்து அளித்து - இரக்ஷித்து, மாற்றுதற்கு - கெடுப்பதற்கு, ஏதுவுமாய் - மும்மூர்த்திகளென்கிற காரணமாகியும், துன்னு - நிறைந்திருக்கின்ற, பரிபூரணமாய்-பரிபூரண ஸ்வரூபமாகியும், இருப்ப தெது - இருக்கின்ற தெது வோ, அதுவாம் - அதுவாகும், தூய பத மிரண்டினுக்கும் - மேலான இவ் விரண்டு பதத்திற்கும், சோதியொன்றாகையினால் - ஒளி யொன்றே யாதலால், நன்னிலையே-இந் நல்ல நிலையே, நமதிடத்தில் - நம்மிடத்துள்ள, அறிவும் - ஞானமும், அதுவெனலால் - அதுவே யென்பதனால், ஞானமே பிரமமென - ஞானமே பிரம மென்று, வாக்கியம் - முதல் வாக்கிய மானது, நவின்றது - சொல்லிற்று எ. று.

மற்று ஏ அசைகள்.

(இ - ம்.) சீவர்கள் அனைத்தினுள்ளும் விளங்குகின்ற சாக்ஷிகளைப் பிரித்துக் காணுமிடத்து அவை ஏகமாகலின் அஃதே பிரம மெனவும், இவ்வொருமை பன்மைகளின் பிரகாசஞ் சுயஞ் சித்தாதலானும் அதுவே ஆத்மப் பிரகாசமாதலானும் ஆத்மாவே பிரம மென்பதற் கனுபவங் கூறினதாம். (௧௧)

(அ. கை)

யசுர்வேத மகாவாக்கியத்தின் பொருள் கூறுவான் றொடங்கி, அகம் பிரமாஸ்மி யென்பவற்றுள் அகமென்னும் பதப்பொருளான ஆத்மாவின் இலக்கணங் கூறுகின்றார்.

கவி. (வேறு.)

அகம்பிரமாஸ்மியென்றே யறைந்திடும் வாக்கியந்தான்
பகும்பத மூன்றதாகும் பன்னியவகமேதென்னிற்
சகம்பரி பூரணத்தாற் றன்பரமார்த்தமாகி
யுகந்தொறு மழியாதாகி யொன்றொடுந் தாக்காதாகி.

(இ - ள்.) அகம் - அகமெனவும், பிரமம் - பிரமமெனவும், அஸ்மி - அஸ்மி யெனவும், அறைந்திடும் வாக்கியந்தான் - சொல்லிய இரண்டாம் வாக்கியமானது, பகும்பத மூன்றதாகும்-பகுக்கப்படும்பத மூன்றாகும், பன்னிய - இங்ஙனங் கூறிய, அக மேதென்னில் - அகமென்ப தியாதென்றால், சகம் - உலகத்தில், பரிபூரணத்தாற்றன் - பரிபூரண ஞானத்தினால்,

பரமார்த்தமாகி - யதார்த்தமாகியும், உகந்தோறும் - உகங்கள் தோறும், அழியாதாகி - அழியாததாகியும், ஒன்றொடுந் தாக்காதாகி - ஒன்றோடுங் கூடாததாகியும் எ. று. (௨௦)

(அ. கை.) இ. து.

கவி.

அனைத்தையுங் கடந்ததாகி யனுபவித் தறிவதாகி
நினைத்ததே கத்தினுள்ளே நிச்சயப்படுவதாகி
வினைத்தசூக் குமதேகத்தை விளக்குவ தாகித்தானே
தனக்கிணை யென்னலாகுஞ் சைதன்னியங்காணென்பார்.

(இ - ள்.) அனைத்தையுங் கடந்த தாகி - சகல வஸ்துக்களுக்கும் அதீதமாகியும், அனுபவித் தறிவ தாகி - அனுபவித்துக் காண்ப தாகியும், நினைத்த தேகத்தினுள்ளே-கருதிய வுடலின்கண், நிச்சயப்படுவ தாகி - நிச்சயிக்கப்படுவதாகியும், வினைத்த சூக்கும தேகத்தை - வினை வடிவமான சூக்கும சரீரத்தை, விளக்குவதாகி - விளக்கு விப்பதாகியும், தானே தனக்கு - தனக்குத் தானே, இணையென்னலாகும் - சமானமென்று சொல்லத்தக்கதாயு மிருக்கின்ற, சைதன்னியங்காணென்பார் - ஞானமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் எ. று. (௨௧)

இ. து.

கவி.

இன்னிலை யறியுமாறு மியம்பு துமஞ்ஞானத்தான்
முன்னக மென்றவுன்னை முடித்ததே யகமாங்கண்டா

யென்னனை மனையென்றற்போ லெனதுட லென்றுகாணி
லன்னதே கத்தைவேறு யறிந்தவிந் திரியந்தானும்.

(இ - ள்.) இன்னிவை - இத்தன்மையான இலக்கணங்களை, அறியுமாறும் - நின தனுபவத்துக் கொத்தறியும்வகையையும், இயம்புதும் - அகமென்னும் பதத்தைக் கூறுதும், அஞ்ஞானத்தால் - அறியாமையினால், முன் னகமென்றவுன்னை - முன் தேகமுதலியவற்றை நானென்று கொண்ட சிதாபாசனை, முடிந்ததே - கெடுத்ததே, அகமாங் கண்டாய் - அகமாகும், என்னனை - என்றாய், மனை - என் மனைவி, என்றற்போல் - என் றுரைப்பதுபோல, எனதுடலென்று காணில் - என் தேகமென்று பார்க்கில், அன்ன தேகத்தை - அத்தன்மையான வுடலை, வேறுயறிந்த - வேறாகக் கண்ட, இந்திரியந் தானும் - இந்திரியங்களே நீ யாகும் எ. று.

முடித்ததென்பது முடிந்ததென மெலிந்து நின்றது. (உ௨)

(அ. கை.) இ. து.

கவி.

இந்திய மகமென்றனு மென்கணென் காலென்கையென்
றுந்துமுட் கரணந்தானு முன்மன மென்கையாலே
யந்தவுட் கரணர்தானு மகற்றிய சீவனீயாஞ்
சந்தத மென்சீவன்கா னென்கையாற் சாட்சியாவாய்.

(இ - ள்.) இந்திய மக மென்றனும் - இந்திரியங்களை யானென்றுரைக்கினும், என்கண் - எனது கண்,

என்கால்-எனது கால், என் கை யென்று-எனது கைக ளென்று, உந்தும்-இவ்விந்திரியங்களை நடாத்துகின்ற, உட்கரணம் - அந்தக்கரணம், தானும்-நீயாம், உன்மன மென்கையாலே - உன் மனமென்றுரைத்தலால், அந்த வுட்கரணந்தானும் - அவ்வந்தக்கரணத்தையும், அகற் றிய - நீக்கிய, சீவனீயாம் - சீவனேநீயாம், சந்ததம் - எப்போதும், என் சீவன்காணென்கையால் - என் சீவ னென்றுரைத்தலால், சாக்ஷியாவாய் - கூடஸ்தனே நீயாவாய் எ. று.

(இந்நான்கு கவியின்றாற்பரியம்.) இந்நான்கு கவி யினுள் இரண்டில் அகமென்பது இனையதெனவும், மற் றிரண்டில் அகப்போலிகளை விலக்கி யவ்வகம் நீயென வும் விளங்கக் கூறியதாம். (உக)

(அ. கை.)

இரண்டாவது பிரமமென்னும் பதப்பொருளான ஈசுரன் இலக்கணம் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

அப்படியெல்லாநீக்கி யறிவதேயகமாங்கண்டாய்
செப்பியபிரமமென்னச் செறிபதந்தானேதானு
மொப்புயர்வற்றுவேறு ருபாதியற்றகண்டரூபந்
தப்பிலாப்பூரணத்தாற் சச்சிதானந்தமாமே.

(இ - ள்.) அப்படி-அவ்வண்ணம், எல்லா நீக்கி- தூலமுதலிய அனைத்தையும் அகற்றி, அறிவதே

விலக்ஷணமாகத் தரிசிப்படுமே த, அசமாங்கண்டாய்-நானென்னுங் கூடஸ்தனென்று தெரிந்து கொள்வாய், செப்பிய - இரண்டாவது சொல்லிய, பிரம மென்னச் செறிபதம் - பிரமமென்றுரைத்த பூரணபதமானது, தானே தானாய் - தானே தானாகி, ஒப்புயர் வற்று - சமானாதிகமின்றி, வேறொருபாதியற்று - மற்றொரு கீழான வுபாதிகளை நீக்கி, அகண்டரூபம் — அகண்டாகாரம், தப்பிலா - தவறுதுள்ள, பூரணத்தால் - பரிபூரணத் தன்மையினால், சச்சிதானந்தமாம் - சச்சிதானந்தப் பிரமமாம் எ. று.

(இ - ம்.) தானேதானாய்ச் சர்வ பரிபூரணமாக விளங்குஞ் சச்சிதானந்த சொரூபமே பிரமமெனக் கூறியதாம். (உச)

(அ. கை)

மூன்றாவது அஸ்மியென்னும் பதப்பொருளான சொரூப இலக்கணம் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

இவையிதுவஸ்மியென்னு மீறுளபதார்த்தஞ்சொல்லிற்
சுவைதருமயிக்கியமாகித் துவிதத்திலுபாதியற்றுப்
பவமகற்றியவானந்தப் பரங்கடலாகுமென்றே
தவவடிவானஞானத் தலைவர்களுரைப்பர்தாமே.

(இ - ள்.) இவை - இவ்விரண்டு பதங்களின் அருத்தம், இது - இதுவாம், அஸ்மியென்னும் - அஸ்

மியென்கிற, ஈறுள பதார்த்தஞ் சொல்லில் - முடிவி லுள்ள பதப் பொருளைச் சொல்லின், சுவை தரும் - பிரம ரசத்தைக் கொடுக்கின்ற, அயிக்கியமாகி - அயிக்கமாய், துவிதத்தி லுபாதியற்று - துவித பாவனையி லுள்ள உபாதிகணீங்கி, பவமகற்றிய - உதயாஸ்தமான மின்றிய, ஆநந்தப்பரங் கடலாகுமென்றே - பிரமானந்த சாகரமாமென்று, தவவடிவான - தவரூபமான, ஞானத்தலைவர்கள் - ஞான சிரேஷ்டர்கள், உரைப்பர் - சொல்லுவார்கள் எ. று.

தாம் ஏ இரண்டும் அசைகள்.

(இ - ம்.) முற் பதங்களின் இருமையி லுள்ள வொருமையைக் கொண்டு அவ்விருமையை நீக்கி, நித்தியானந்தமாக விளங்குவதே அஸ்மியெனக் கூறிய தாம். (உரு)

(அ. கை.)

சாமவேத மகாவாக்கியத்தின் பொருள் கூறுவான் றொடங்கி, தற்பதப் பொருளான ஈசுரன் இலக்கணம் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

**கலி. (வேறு)**

தத்தொமசியெனும்வாக்கியம் பதமூன்றுமதிலே
தற்பதத்தின்பொருளுரைப்பாஞ் சமைத்தவொருகடந்தா
னித்தகைமைபெறமுன்ன மொருவடிவங்கதுபோ
லிருப்பனவும்வேற்றுமையா யிருப்பனவுமின்றிச்

சத்தாகித்தமதாகிப் பெயர்தானு மின்றித்
தானேதானயிருந்தசைதன்னியம்போ
லத்தகைமையெப்பொழுதும்பெற்றிருக்குஞ்சத்தா
யநிர்வசனமாயவிளங்குமதுபிரமமாமே

(இ - ள்.) தத்தொமசியெனும் - தத்தொமசி யென்கிற வாக்கியம் - மூன்றும் வாக்கியத்திற்கு, பதமூன்றும் - மூன்றுபதமாம், அதிலே - அவற்றில், தற்பதத்தின் - முந்தின தற்பதத்தின், பொரு ளுரைப்பாம் - அருத்தத்தைச் சொல்லுவாம், சமைத்த வொரு கடந்தான் - செய்த ஓர் கடமானது, இத்தகைமை பெறு முன்னம் - இக்கட வடிவாதற்கு முன்னம், ஒருவடிவு - ஒரு மிருத்திகை வடிவமாம், அங்கதுபோல் - அத்தன்மைபோல, இருப்பனவும் - ஒன்றாயிருப்பனவும், வேற்றுமையாயிருப்பனவும் - வேறுபாடாயிருப்பனவும், இன்றி - இல்லாமல், சத்தாகி - சத்தாமாத்திரமாயும், தமதாகி - தன்மயமாயும், பெயர்தானுமின்றி - நாமும் இல்லாமல், தானே தானு யிருந்த - தானே தானுகவும் விளங்கிய, சைதன்னியம்போல் - ஞானம்போல, அத்தகைமை - அத்தன்மையை, எப்பொழுதும் - எப்போதும், பெற்றிருக்கும் - அடைந்திருக்கின்ற, சத்தாய் - சத்தாகி, அநிர்வசனமாய் விளங்கும் - வசனுதீதமாக விளங்கும், அது பிரமமாம் - அதுவே பிரமமாம் எ. று.

ஏ அசை.

(இ - ம்.) சுயஞ் சித்தாய் அதீதமாக விளங்குஞ் சத்தே தற்பதமென்பதற்கு அனுபவப் பொருளாமெனக் கூறியதாம். (உசு)

(அ. கை.)

தற்பதத்தின் உபாதிகளை நீக்கிய விடத் துள்ள அவ்வீசுர நிலையை இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கலி.

இன்னமுந் தற்பதம் விளங்கு மேதுவெலா முரைப்பே
மிப்பதத்தின் பொருளது தொம்மென் றியம்பல்சீவ
னன்னபத மிரண்டினுக்கு மயிக்கமசி யென்ப
ரவைகளுபா தியிற்பிரிந் தயிக்கமும் பெற்றதுகேள்
துன்னுசக தீசனுக்குச் சகலபிராணி கடன்
றாலமே தூலமவர் சூக்கமே சூக்க
மின்னின்மறைந் திடுமாயை காரணமாமிதனை
வேறுக்கித் தானவனுய் விளங்கியது பிரமம்.

(இ - ள்.) இன்னமும் - இன்னும், தற்பதம் - தற்பதமுதலிய மூன்று பதங்களும், விளங்கும் - விளங்கும்படியான, எதுவெலா முரைப்பேம் - காரணங்களியாவுஞ் சொல்லுவோம், இப்பதத்தின் பொருள் - இத்தற்பதத்தின் அருத்தம், அது - அது வென்னும் ஈசுரனும், தொம் மென்றியம்பல் - தொம் மென்று கூறியபதத்தினருத்தம், சீவன் - நீ யென்னுஞ் சீவனும், அன்னபதம் - அத்தன்மையான பதங்கள், இரண்டினுக்கும் - இரண்டிற்கும், அயிக்கம் - அயிக்கமே, அசி

யென்பர் - அசிபதத்தின் அருத்த மென்று பெரியோர் கள் சொல்லுவார்கள், அவைகள் - அப் பர சீவர்கள், உபாதியிற் பிரிந்து - உபாதிகளினால் வேறுபட்டு, அயி க்கமும் பெற்றது கேள்-நிருபாதியினா லொன்றுபட்ட தையுங் கேட்டாய், துன்னு சகதீசனுக்கு - வியாபக மான சக தீசுவரனுக்கு, சகல பிராணிகடன் - சகல சீவர்களுடைய தூலமே - தூலசரீர சமஷ்டியே, தூல ம் - தூல சரீரமாம், அவர் சூக்கமே - அச் சீவர்களு டைய சூக்குமசரீர சமஷ்டியே, சூக்கம் - சூக்கும சரீ ரமாம், மின்னின் - மின்னலைப்போல, மறைந்திடுமா யை - தோன்றி மறைகின்ற மாயையே, காரணமாம் - காரண சரீரமாம், இதனை - இம்மூன்று சரீரங்களையும் வேறாக்கி - வேறுபடுத்தி, தானவனாய் விளங்கியது - சீவனே யீசுரனாகப் பிரகாசிப்பது, பிரமம் - பிரமமாம் எ. று.

(இ. ம்.) உபாதியினா லுள்ள விராட் டிரணிய கருப்ப மாயை யென்னும் மூவுடலையும் ஈசுர பாவனை யையும் நீக்கி நிருபாதிகமாய்க் கூடஸ்தனோடு ஏகமாக விளங்கிற்பிரமமாம்; அப்பிரமமே அதுவென்னும் பத த்திற்கு அனுபவப்பொருளாமெனக் கூறியதாம்.(உஎ)

(அ. கை.)

இரண்டாவது தொம்மென்னும்பதப்பொருளான சீவன் இலக்கணம் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

சீவவுபாதியை யுரைக்கிற் றன்னளவே தூலஞ்
  சிலகருவி சூக்குமமாங் காரணமஞ்ஞான ந்
தாவுமித னபிமானி சீவனிவை யணுகாச்
  சாக்ஷிபது தொம்மென்றே சாற்றிய கூடஸ்தன்
காவலவன் சீவனெனு முபாதியெலா நீங்கிக்
  கலப்பதுவே யசிபதமாக் காட்டுமது நீங்கும்
பாவனையு மயிக்கியமாம் பண்பும்விதி வழியே
  பகுத்துரைப்பர் பெரியோர்கள் பக்குவரானவர்க்கே.

(இ-ள்.) சீவவுபாதியையுரைக்கில் - சீவோபாதியைக் கூறுமிடத்து, தன்னளவேதூலம் - தன்மட்டுமுள்ள வியஷ்டியே தூல சரீரமாம், சில கருவி சூக்குமமாம் - சில தத்துவங்களான வியஷ்டியே சூக்கும சரீரமாம், அஞ்ஞானம் - அவித்தையே, காரணம் - காரண சரீரமாம், தாவும் - இச்சரீரங்களிற் றாவுகின்ற, இதன் - இவ்வுபாதித்திரயத்தின், அபிமானி - விசுவ தைசத பிராஞ்ஞ அபிமானி, சீவன் - சீவனும், இவையணுகா - இவைகளிற் சாராமல் விலக்ஷணமாக விளங்கும், சாக்ஷியது - அச்சாக்ஷியே, தொம்மென்று - தொம்மென்ற பதத்திற்குப் பொருளாக, சாற்றிய - சொல்லிய, கூடஸ்தன் - கூடஸ்தனும், காவலவன்-தலைவனான பரனிடத்தில், சீவன் என்னும் உபாதியெலாம் - சீவத்துவமாகிற வுபாதிகளனைத்தும், நீங்கி-விடுபட்டு, கலப்பதுவே - அக்கூடத்தன் அயிக்கமாவதே, அசிபதமாக் காட்டும் - அசிபதமாகத் தெரிவிக்கும், அது நீங்கும்

அவ்வுபாதிகள் நீங்கின விடத்துள்ள, பாவனையும் - பாவனைகளையும், அபிக்கியமாம் பண்பும் - கலந்த தன்மையையும், விதிவழியே - வேதத்தில் விதித்த மார்க்கமாக, பக்குவரானவர்க்கு - பக்குவமானவர்களுக்கு, பெரியோர்கள் சத்துக்கள், பகுத்துரைப்பர்-பகுத்துக் கூறுவார்கள் எ - று.

எ கை.

(இ - ம்.) உபாதியாயுள்ள தூல சூக்கும காரணமென்னும் மூவுடலையுஞ் சீவபாவமும் நீக்கி நிருபாதிகமாய்ப் பிரமத்தோடு ஏகமாய் விளங்குங்கூடஸ்தனே நீயென்னும்பதத்திற்கு அனுபவமெனக் கூறியதாம். உ-அ

(அ. கை.)

மூன்றாவது அசிபதப் பொருளான அத்துவித சொரூபத்தின் இலக்கணம் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

நீயெனு முபாதிக்குத் தூலமுஞ் சூக்குமமு
  நிருவகிப்பதீசனென்று நிச்சயிக்கும் பொழுதே
போயதுவஞ்ஞானமென்றும் பொருளதுநீயென்றும்
  புகல்வரந்தவீசனுக்குப் பொருந்துமுபாதிகளு
மாயையெனுங்காரணத்தை மித்தையென்றேயறிந்தான்
  மற்றையிரண்டேனும்போய் வகுத்ததொழி லிலனாய்த்
தூயபிரமம்மெனவே சொல்லிறந்ததுவாஞ்
  சுத்தமதிற்சீவபரஞ் சோதியுஞ்சோதியுமே.

(இ - ள்.) நீயெனும் - நீயெனத்தக்க, உபாதிக்கு - சீவோபாதிக்கு, தூலமுஞ் சூக்குமமும் - தூல சரீரத்தையுஞ் சூக்கும சரீரத்தையும், நிருவகிப்பது - தாங்குவது, ஈசனென்று - ஈசுரனென்று, நிச்சயிக்கும் பொழுதுதே - நிச்சயித்த அக்கணமே, போயது - நீங்கியது, அஞ்ஞான மென்றும் - மாயா காரியமான அவித்தையென்றும், பொருளது நீ யென்றும் - சேடித்த பொருளாவது கூடஸ்தனென்றும், புகல்வர்-சத்துக்கள் சொல்வார்கள், அந்த வீசனுக்கு - அத்தற்பதத்தின் அருத்தமான ஈசுரனுக்கு, பொருந்து முபாதிகளும் - அடுத்திருக்கும் உபாதிகளுள்ளும், மாயையெனுங் காரணத்தை, மாயையென்கிற காரண சரீரத்தை, மித்தையென்றே யறிந்தால் - பொய்யென்று கண்டால், மற்றை யிரண்டடேனும் போய் - காரண சரீரம் நீங்குவதன்றியும் அதன்காரியமான சூக்கும தேகமுந் தூல தேகமும் நீங்கி, வகுத்த தொழிலிலனாய் - அவைகட்குப் பகுத்திருந்த தொழில்களும் இல்லாதவனாய், தூய பிரமம் மெனவே - பரிசுத்தமான பிரம மென்று சொல்லிறந்தததுவாம் - வசனாதீதமான ததுவேயாம், சுத்தமதில் - இவ்விருவுபாதியும் விட்ட சுத்தத்தில், சீவபரம் - கூடஸ்த பிரமமான இரண்டும், சோதியுஞ் சோதியும் - ஒளியும் ஒளியுமாகக் கலக்கும் எ. று.

ஏ ஙைச.

(இ - ம்.) சமஷ்டி வியஷ்டியான தூல சூக்கும சரீரங்களும் மாயை யவித்தையுஞ் சீவேசுர பாவமும்

நீங்கி, அதுவே நீ, நீயே யது வென்னுங் கூடஸ்த பிர மாயிக்க அத்துவிதமான சுயஞ் சோதியே யானுமென் னும் பதத்திற்கு அனுபவமெனக் கூறியதாம். (உ௯)

(அ. கை.)

அவ்வனுபவந் தெளிவாக விளங்கும் நிமித்தம் அவ்வயிக்கத்தை மூன்றுவிதமாக இச்செய்யுளிற் கூறு கின்றார்.

கவி.

இவையுணரு மிடத்தயிக்கிய மூன்றுவித முரைப்ப
ரேதென்று லவ்வறிவே பூரணமா யிருத்த
லவையவமாங்கடமடவுபாதிகளைநீங்கு
மாகாய மெனவறித லப்பொருளைத் தானே
சுவைபடவே தியானித்த லிவைமூன்றுவிதமாந்
துவந்துவங்கள்பலவுமற்றுச்சுயம்பிரகாசமதாய்
நவையிறந்துசொல்லிறந்துநானுமிறந்திறவா
ஞானமிறந்திராசியமாய்நவின்றதத்துவிதமே.

(இ. ள்.) இவை - இவ்வயிக்கத்தை, உணருமிடத்து - அனுபவமாய் அறியுமிடத்து, அயிக்கம் - அவ்வயிக்கம் மூன்றுவிதமுரைப்பர் - மூன்றுவகையாகச் சொல்லுவார்கள், ஏதென்றால் - அவை யாதென்னில், அவ்வறிவே பூரணமாயிருத்தல் - அவ்விரண்டுணர்வும் பூரணமான சத்தாயிருப்பதாம், அவையவமாங் கடமட - உடல்களாகிய கட மடத்திற் றோன்றும், உபாதிகளை நீங்கும்-கடாகாச மகாகாச கடசலப் பிரதிவிம்பாகாச மேக சலப் பிரதிவிம்பாகாச மென்கிற உபாதிகள் நீங்

கின, ஆகாயமென ஆகாயத்தைப்போல, அறிதல் - சிவேசுர கூடஸ்த பிரமமென்கிற வுபாதிகள் நீங்கிய சிதாகாசமாக அறிதல், அப்பொருளைத்தானே - அச்சத்துஞ் சித்துமாகிய பொருளையே, சுவைபடவே தியானித்தல் - பேரானந்த முண்டாகத் தியானித்து அதீதமாதலாம், இவை மூன்றுவிதமாம் - இவ்வயிக்கங்கள் மூன்று வகையாகும், துவந்துவங்கள் பலவுமற்று - தொந்தங்கள் அனைத்தும் நீங்கி, சுயம்பிரகாசமதாய் - சுயம்பிரகாசமாய், நவை யிறந்து - குற்றங்கள் நீங்கி, சொல்லிறந்து-வசனாதீதமாய், நானுமிறந்து - அகம் பாவம் நீங்கி, இறவா ஞான மிறந்து - அழிவற்ற ஞானாதீதப்பட்டு, இராசியமாய் - கூடமாய், நவின்றது அத்துவிதம் - சொன்னது அத்துவித மாம் எ. று.

ஏ சை.

(இ. ம்.) கூடஸ்தன் பிரமத்திற் பூரணமாதலும் பிரமங் கூடஸ்தனிற் பூரணமாக இருத்தலும் அவ்விரண்டும் நித்தியானந்தமாகக் கரைதலுமாகிய மூன்றுவித அயிக்கத்து அத்துவித சுயம்பிரகாசமே யனுபவமெனக் கூறியதாம். (௩௦)

(அ. கை.)

அதர்வணவேத மகாவாக்கியத்தின்பொருள் கூறுவான் றொடங்கி அயமென்னும் பதப்பொருளான ஞானாத்மாவினிலக்கணத்தை இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கலி. (வேறு.)

அயமான்மாப் பிரமமென வுரைத்தமொழிப் பதமூன்றி
யலமே தென்னிற்
சுயமாக விளங்குகையா லபரோக்ஷ மாயிருத்தல்
சுபாவமாகும்
பயனான தேததிலே யெவ்வுலகு முதித்தொடுங்கும்
பரமேதந்த
வியனான வான்மாவே பிரமமென வதன்பயன்றான்
விளைந்தவாறே.

(இ. ள்.) அயமான்மாப் பிரமமென - அயமாத்மா பிரமமென்று - உரைத்தமொழி, கூறிய நான்காம் வாக்கியத்தின், பதமூன்றில் - மூன்று பதத்தில், அயமேதென்னில் - முந்தின அயமென்ற பத மியாதென்னில், சுயமாக விளங்குகையால் - தானாக விளங்குதலால், அபரோட்சமா யிருத்தல் - பிரத்தியட்ச ஞானமா யிருப்பது, சுபாவமாகும் - சுபாவமாம், பயனான தேது - பிரயோசனமான தெதுவோ, அதிலே - அதில் எவ்வுலகு முதித்தொடுங்கும் - சமஸ்த லோகங்களும் உண்டாகி யடங்குதற்கு ஆதாரமான, பர மேது - பர மியாதோ, அந்தவியனான - அப்பெருமையுள்ள, ஆன்மாவே - ஆத்மாவே, பிரமமென-பிரமமென்று, அதன் பயன் றான் - அப் பதத்தின் பொருள், விளைந்தவாறு - உண்டானவாறு எ. று.

ஏ-அவை.

(இ. ம்.) சுயம்பாதலால் அபரோட்ச ஞானமாகியும், பிரயோசனங்களுக் கெல்லாம் பிரயோசனமானது எதுவோ அதுவாகியும், சமஸ்தமும் உதித்தொடுங்குவதற்குக் காரணமானது எதுவோ அதுவாகியும் இருக்கின்றபடியால் அவ்வாத்மாவே பிரம மெனப் பொருளுண்டாயிற்றென்பதாம். (௩௧)

(அ. கை.)

இரண்டாவது ஆன்மாவென்னும் பதப்பொருளான சீவனதிலக்கணத்தை இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

இனியான்மாவெனும் பதத்தினியல்பகங்காராதியுட
லீறுயுள்ள
துனியான காரணகா ரியத்தொடர்பா யதைவிளக்குஞ்
சோதியாகித்
தனியாகி யறிவறியா மையையறியா வறிவாகித்
தானே தானுஞ்
சனிவாய பிரமமெங்கு மகிட்டான பூரணமாங்
கருதுங்காலே.

(இ. ள்.) இனி யான்மாவெனும் பதத்தின் - மேலாத்மாவென்னும் இரண்டாம்பதத்தின், இயல்பு-தன்மையான பொருளானது, அகங்காராதி, அகங்காரமுதல், உடலீறுயுள்ள - தேகமுடிவாயுள்ள துனியான - துன்பமான, காரண காரியத் தொடர்பால் - காரண காரியத் தொடர்ச்சி யாகியும், அதைவிளக்குஞ் சோதியாகி - அவைகளை விளக்குகின்ற விளக்கமாயும், தனி

யாகி - தனிமையாயும், அறிவறியாமையை - ஞானஞ் ஞானத்தை, அறியா - அறியாத, அறிவாகி-சுயஞ் சித்தாகியும், தானேதானும் - தானே தானுகியும் இருப்பதால், கருதுங்கால் - சிந்திக்குமிடத்து, எங்கும் - எவ்விடத்தும், அதிஷ்டானம் - அதிஷ்டானமாயும் பூரணமாம் - பரிபூரணமாயும் இருக்கின்ற, கனிவாய - ஆநந்தமயமான பிரமம் - பிரமாம் எ. று.

ஏகாரம் ஈற்றசை.

(இ. ம்.) அகங்கார தத்துவமுதற் றேகபரியந்த முள்ள காரண காரியங்களை விளக்குகின்ற சுயஞ்சோதியாகியும், சமானமில்லாததாகியும், ஞானஞ்ஞானரகிதமான சுயஞ் சித்தாகியும் தானே தானுக விளங்குகின்ற பூரணமாதலால் அவ்வாத்மாவே பிரமமாயிற்றெனக் கூறியதாம். (௩உ)

(அ - கை.)

மூன்றுவது பிரம மென்னும் பதப் பொருளான ஈசுரனிலக்கணத்தை இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

ஆகையினு லயமான்மா வெனும்பதத்தால் விளங்கியசீ
வான்மாவுக்கு
மேலேப் பிரமமென மொழிபதத்தாற் பரமான்மா
வினுக்கயிக்கிய
மோகவிபரீதமற காலுவாக்கியத்தானு
மொழிந்தாரேனும்

போகபூரணசொரூப ஞானமன்றித்தேறாதப்
பொலிவுஞ்சொல்வாம்.

(இ. ள்.) ஆகையினால் - ஆதலால், அயமான்மா வெனும் பதத்தால் - அயமென்றும் ஆத்மாவென்றும் இரண்டுபதங்களால், விளங்கிய - பிரகாசித்த, சீவான் மாவுக்கும் - சீவாத்மாவுக்கும், ஏகீகப் பிரமமென - ஏகமாகிய பிரம மென்று, மொழி பதத்தால் - சொல் லிய மூன்றும் பதத்தினுள்ள, பரமான்மாவினுக்கும் - பரமாத்மாவிற்கும், அயிக்கியம் - கூறப்படுவது அயிக் கியமாம், மோக விபரீத மற - மோகமாகிய விபரீதம் நீங்கும்படி, நாலுவாக்கியத்தானும் - நான்கு மகாவாக் கியங்களினாலும், மொழிந்தாரேனும் - அவ்வயிக்கத் தைச் சொல்லினாராயினும், போகம் - அனுபவமாக விளங்கும், பூரணசொரூபம் - பரிபூரணசொரூபமாகிய, ஞானமன்றி - ஆனந்த ப்ரக்ஞையன்றி, தேறாது - தெ ளியாது, அப்பொலிவும் - அதுதெளியும் வாக்கியமும், சொல்வாம் - உரைப்பாம் எ. று.

(இ. ம்.) ஆத்மாவே பிரமமாய்ப் பிரமமே யாத்மா வாய் எப்போதும் ஏகமாய் விளங்கும் அத்துவித சொ ரூபமேனாத்மாவாகிய பிரமமெனக்கூறியதாம். (௩௧)

(அ. கை.)

இந்நான்கு வேதங்களின் முடிவினுள்ள நான்கு மகா வாக்கியங்களின் உற்பத்திமுத லுரையீறாக ஒவ் வொன்றிற்குப் பத்துப்பத்தாகப் பகுத்துக்கூறிய இக்

நாற்பதினுள்ளும் ஏகமாயுள்ள பொருளை யொருமைப் படுத்திக் கூறுவிடின் அவ்வத்துவிதானுபவங் கரதலாமலகம்போல வெளிப்படாமையான் அங்ஙனம் வெளிப்படும் நிமித்தம் அப்பொருளொருமையின் இலக்கணத்தைச் சொரூப இலக்கண வாக்கியமென்னும் நாமத்தோடு சச்சிதானந்தப் பிரமமெனவும், ஆனந்தோப் பிரமமெனவும் இரண்டுவிதமாகப் பகுத்துக் கூறுவான் றொடங்கி முன்பு சச்சிதானந்தப் பிரம மென்னும் வாக்கிய இலக்கணத்தை இச்செய்யுளிற் கூறுகின்றார்.

**கவி.**

பேசியசொரூபத் தியல்கேள் சத்தியஞானனந்தப்
பிரமமென்று
மாசகலு மானந்தோப் பிரமமென்றுமிரண்டுமொழி
யதின்முன்னோது
நாசமிலாச் சத்தியாதி பதங்களினாற் பிரமத்தை
நாமரூப
லேசமறச் சத்தியஞா னனந்தப் பிரமமென்றே
யியம்பலாமே.

(இ. ள்.) பேசிய - நான்கு மகாவாக்கியங்களினாற் கூறிய, சொரூபத் தியல்கேள் - அத்துவித சொரூபத்தின் றன்மையைக் கேட்பாய், சத்தியம் - சத்தும், ஞானம் - சித்தும், ஆனந்தம் - ஆனந்தமுமாகிய, பிரமமென்றும் - சச்சிதானந்தோப் பிரம மெனவும், ஆசகலும் - குற்றமற்ற, ஆனந்தோப் பிரம மென்றும் - ஆனந்தப் பிரமமெனவும், இரண்டு மொழி - இரண்டு

வாக்கியமாம், அதின் - அவைகளின், முன்னோதும் - முற்கூறிய, நாசமிலா - அழிவற்ற, சத்தியாதி பதங்களினால் - சச்சிதானந்தமென்னும் பதங்களினால், நாம ரூப லேசமற - அநிர்த சட துக்கமாகிய சகத்தின் நாம ரூப மெவ்வளவும் இல்லாமற் கெடும்படியாக, பிரமத்தை-பிரம சொரூபத்தை, சத்திய ஞானனந்தப் பிரம மென்றே-சச்சிதானந்தப் பிரம மென்று, இயம்பலாம் - உரைக்கலாம் எ. று.

ஏ ஈற்றசை.

(இ. ம்.) இந் நான்கு வாக்கியங்களிற் கூறிய ஞானம்: அகம், தொம், அயம், ஆத்மா வென்னுஞ் சீவபதம் ஐந்தும்; பிரமம், பிரமம், தத், பிரம மென்னும் ஈசுர பதம் நான்கும்; அஸ்மி, அசி யென்னுஞ் சொரூப பதம் இரண்டும் ஆகிய பதினொரு பதங்களின் பொருளாயுள்ள சச்சிதானந்தமென்னும் பதங்களின் ஒருமையான அத்துவிதப் பிரமத்திற்கு அநிர்த சட துக்க ரூபமான திரிசியம் நீங்கும் நிமித்தஞ் சச்சிதானந்த மென்னுங் கற்பனை நாமம் உண்டாயிற் றென்பதாம். (௩௪)

(அ. கை)

மற்றைய ஆனந்தோப் பிரம மென்னும் வாக்கிய இலக்கணத்தை இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கலி.

ஆனந்தோப் பிரமமெனு மிரண்டாம்வாக்கியர்தன்னை
லகண்டாகார

வானந்தம் பிரமமாய்த் துன்பறியா வின்பமா
மாகையாலே
யானந்த மானந்தி யெனும்வடிவ மிரண்டுமற
வளவிலாத
வானந்தஞ் சீவனிடத் தாதலால் வாக்கியத்தி
னயிக்கங்கூடும்.

(இ. ள்.) ஆனந்தோப் பிரம மெனும் - ஆனந்தப் பிரமமென்கின்ற, இரண்டாம் வாக்கியந்தன்னால் - இரண்டாம் வாக்கியத்தினால், அகண்டாகாரவானந்தம்-பூரணானந்தமானது, பிரமமாய் - பிரமசொரூபமாய், துன்பறியா - துன்பங் காணாத, இன்பமாம் - பேரானந்தமாம், ஆகையால் - ஆதலினால், ஆனந்தம் - ஆனந்தமும், ஆனந்தியெனும் - ஆனந்தனுமென்கின்ற, வடிவமிரண்டுமற - இரண்டுருவங்களுங் கெட, அளவிலாத - மட்டற்ற, ஆனந்தம் - நிரதிசயானந்தம், சீவனிடத்தாதலால் - ஆத்மாவினிடத் துண்டாதலால், வாக்கியத்தின் - முன் வாக்கியங்களிற் கூறிய படி, அயிக்கங்கூடும் - அத்துவிதங் கூடும் எ. று.

(இ. ம்.) அவ்வத்துவிதப் பிரமத்திற்குச் சிற்சத்தி முதற் றேகபரியந்தமுள்ள கற்பனைகளனைத்துந்தனது பேரானந்தப் பிரகாசமாக விளங்கி நிற்றலின் ஆனந்தோப் பிரம மெனவும், அந்நிரதிசயானந்தம் ஆத்மாவிற்கே சுபாவமாதலால் அனுதி சித்தமாயுள்ள அத்துவிதமே சுவானுபவ மெனவுங் கூறியதாம். (கரு)

(அ. கை.)

இங்ஙனம் முடிவாகக் கூறிய அத்துவித சொரூபத்தை யதி தீவிரமுள்ள சீடர்க ளடையும் நிமித்தம் அவ்வாக்கியங்களை யுபதேசிக்கும் முறைமைப்படியே ஆசிரியர் கூறும் பிரதிபத்தி வாக்கியத்தின் இலக்கணத்தை இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கலி.

அத்துவித மிப்படியே கூடுதற்கு வாக்கியத்தி
னடைவேயாசான்
பத்திகொடு வீடுபெறு சீடனுக்குச் சொற்பிரதி
பத்திவாக்கிய
நித்தசுத்த புத்தமுத்த சத்தியபர மானந்தாத்
தொய்தநீங்கா
வொத்தபிரமம் மகமஸ்மி யென்பரதன் பொருளு
முரைத்தும்யாமே.

(இ. ள்.) அத்துவிதம் - அத்துவித வஸ்துவை, இப்படியே - இவ்வண்ணமே, கூடுதற்கு-சேர்வதற்கு, வாக்கியத்தினடைவே - மகாவாக்கியங்களின் முறைமைப்படி, ஆசான் - ஆசிரியர், பத்திகொடு - அன்புகொண்டு, வீடுபெறு - மோக்ஷம் அடையத்தக்க, சீடனுக்கு - மாணுக்கனுக்கு, சொல்-அருளப்பட்ட, பிரதிபத்தி வாக்கியம் - பிரதிபத்தி வாக்கியமாவ தியாதென்னில், நித்தம் - நித்தியமும், சுத்தம் - சுத்தமும், புத்தம் - புத்தமும், முத்தம் - முத்தமும், சத்தியம் - சத்தியமும், பரமானந்தம் - பரமானந்தமும், அத்தொய்

தம் - அத்துவிதமும், நீங்காவொத்த - நீங்காமல் ஒத்திருக்கின்ற, பிரமம் - பிரமமே, அகம் - நாம், அஸ்மி-காமே பிரமமான அயிக்கமாம், என்பர் - என்று பெரியோர்கள் கூறுவார்கள், அதன் பொருளும் - அதன் அருத்தமும், யாம் - நாம், உரைத்தும் - சொல்லுதும் எ. று.

(இ - ம்.) அகம் பிரமாஸ்மி யென்னும் பதத்தைப் பிரமாகமஸ்மியென மாறிக் கூறுதலிற் பிரதிபத்தி வாக்கியமெனவும், பிரமத்திற்குள்ள நித்தமுதல் அத்துவிதம் ஈறாயுள்ள குணங்களே யாத்மாவிற்குமுள்ளதாதலாற் பிரமமே யாத்மா வெனவும், அதுவே யஸ்மி யென்னும் பதப் பொருளான அத்துவிதமெனவும் நிரூபிக்கத் தொடங்கினதாம். (௩௬)

(அ. கை.)

முற்கூறிய அத்துவிதமே யாத்மாவென இச்செய்யுளிற கூறுகின்றார்.

கலி.

எங்கைமொழிந்தது வஞ்ஞானமு மஞ்ஞானத்திலுள
வியல்புதானு
மங்கைபர மார்த்தமா வில்லைமக் கதனாலே
முடிவாய்நின்றே
மிந்தவகையவங்கணமதன் றுகமதுருமர்றிங்
கேதெய்ன்றேநி
லத்தவித்த வாக்கியத்திற் குணமுடையதாமெதுவோ
வதுவேதாமால்.

(இ - ள்.) எந்தை மொழிந்தது - எமது பிதாவாகிய ஆசிரியர் கூறியதாகிய வுண்மை, அஞ்ஞானமும் - அவித்தையும், அஞ்ஞானத்திலுள வியல்புதானும் - அவித்தைக்குள்ள தன்மையும், நமக்கு - எமக்கு, முந்தை - முன்னமே, பரமார்த்தமாவில்லை - யதார்த்தமா யில்லை, அதனாலே-அதனால், முடிவாய்நின்றோம்- நாம் அதீதமாக விருந்தோம், இந்தவவையவங்கணமதன்று - இவ்வுடன் முதலிய வடிவங்கள் நமதல்ல, நமதுரு - நமது வடிவம், மற்றிங்கு - வேறிவ்விடத்தில், எதென்றோதில் - யாதென்றுகேட்கின், அந்த இந்த வாக்கியத்தில் - அது நீ யென்னும் பதத்தில், குணமுடையதா மெதுவோ - சிறப்புள்ள பொருள் எதுவோ, அதுவே நாம் - அதுவே நாம் எ. று.

ஆல் அசை.

(இ - ம்.) ஆத்மானாத்ம சொரூபமாகிய அனைத்துமின்றி யத்துவித ஆத்மாவே தானெனக் கூறியதாம்.

(அ. கை.)

பிரமத்திற்குள்ள நித்தம் முதலிய ஏழு குணங்களும் ஆத்மாவின் றன்மை யாதலால் அப்பிரமமே யாத்மாவென் றறிவிக்கத் தொடங்கி, நித்த முதல் மூன்று குணங்களையும் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

இக்குணங்க ளுடையபரப் பிரமமே நாமானோ
மெவ்வாறென்று

*னெக்ககக ஞதியெனச் சனிப்புமரிப் பின்மையினு*
*னித்தமானோந்*
*தொக்குடலம்போலமலத்தின் றுவக்கத்தின்மையினுற்*
*சுத்தமானோம்*
*பொக்கரணம்போனசிக்குமறிவுபெறுமையிற்புத்த*
*மானோனமே.*

(இ - ள்.) இக் குணங்களுடைய - இத்தன்மைகளை யுடைய, பரப்பிரமமே - மேலான பிரம ஸ்வரூபமே, நாமானோம் - நாமாயினோம், எவ்வாறென்றால் - அஃதெவ்வண்ணமெனின், நெக்ககநதியென - கரைதலான ஆகாய முதலிய பாஞ்ச பூத பௌதிகங்கள் போல, சனிப்பு மரிப்பின்மையினால் - நமக்கு உற்பத்தி நாச மில்லாமையால், நித்தமானோம் - நாமே நித்தியமாக விளங்கினோம், தொக்கு - சருமத்தான் மூடப்பெற்ற, உடலம்போல் - தேகத்தைப்போ லிருக்கின்ற, மலத்தின் றுவக்கத்து - மலத் தொந்தங்களின் றன்மை, இன்மையினால் - நமக் கின்மையால், சுத்தமானோம் - நாமே சுத்தமாயினோம், பொக்கரணம்போல் - மித்தையான கரணங்களைப் போல, நசிக்கு மறிவு - கெடுகின்ற வுணர்வை, பெறுமையின் - நாம் பெறுமையினால், நாமே புத்தமானோம் - நாம் புதியதானோம் எ. று.

பொய்க்கரணமென்பது பொக்கரணமென எதுகை நோக்கிக் கடைக்குறையாயிற்று.

(இ. ம்.) உதயாஸ்தமனம் இன்மையால் நித்தமும், களங்கம் இன்மையாற் சுத்தமும், அறி வறியாமை யின்றி யறிவாயிருத்தலாற் புத்தமுமா யிருப்பது ஆத்மா ஆதலால், அதுவே பிரமமெனக் கூறியதாம்.

(அ. கை.)

மற்றைய முத்த முதல் மூன்று குணங்களையும் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

அகங்காரவிருத்தியெனப்பந்தமிலாமையின்முத்த
மாளுேமிந்தச்
சகம்போலவிளக்குமிந்திர சாலமிலாதிருக்கையினுற்
சத்தியமாளுேஞ்
சுகங்காணிற்றன்னையல்லாற்சுகமிலையென்றேபரமா
னந்தமாக
மிருங்காலதேசவஸ்து வெனப்பிரியாவானந்த
வேடமாளுேம்.

(இ. ள்.) அகங்கார விருத்தியென - அகம் பாவ விருத்தியைப்போல, பந்தமிலாமையின்-நமக்குப் பந்தமிலாமையின் - நமக்குப் பந்தமில்லாமையால், முத்தமாளுேம் - நாமே முத்த மாளுேம், இந்தச் சகம் போல - இவ்வுலகத்தைப்போல, விளக்கும் - உண்டாக்குகின்ற, இந்திரசால மிலாதிருக்கையினுல் - நமக்கு மாயாவித்தைக ளில்லாமையால், சத்தியமாளுேம்- நாமே சத்தியமாளுேம், சுகங்காணில் - சுகத்தைப் பார்

க்கில், தன்னை யல்லால் - தன்னைத் தவிர, சுகமிலை யென்றே - வேறு சுகமில்லையென்று, பரமானந்தமாக - பரமானந்தானுபவமாக விளங்கலவதனால், மிகும் - மிகுந்த, கால தேச வஸ்துவென - கால தேச வஸ்து பரிச்சேதத்தைப்போல, பிரியா - வேறு படாத, ஆனந்த வேடமானோம் - நாமே யப்பரமானந்த வடிவமானோம் எ. று.

(இ. ம்) பந்தம் இன்மையின் முத்தமும், அசத்தின்மையிற் சத்தியமும், வேறான சுகமின்றித் தானே சுகமாயிருத்தலிற் பரமானந்தமுமா யிருப்பது ஆத்மா ஆதலால் அதுவே பிரமமெனக் கூறியதாம். (௩௯)

(அ. கை.)

மற்றைய அத்துவிதம் ஒன்றையும் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

தோற்றியவான்பொருள்களெலாந் தானகத்தோற்றலினத்
தொய்தமானே
மாற்றலுடையார்களிவ்வா றகண்டமுந்தானல்லாவா
னந்தமாதல்
போற்றுபிரமச்சொருபச் சமாதியென்பரவதச்சுருதி
புகலும்வாக்கிய
மேற்றிலகம்பிரமநித்திய மத்தானமெனுமிதனை
யியம்பக் கேண்மோ.

(இ-ள்.) தோற்றிய வான் பொருள்க ளெல்லாம் - காணப்படுவனவான பொருள்கள் அனைத்தும், தானகத்

தோற்றலின் - தன்மயமாகக்காணுதலின், அத்தொய்த மாஞேம் - நாம் அத்துவித வடிவமாஞேம், ஆற்றலு டையார்கள் - பர ஞான வல்லப முடையவர்கள், இவ்வாறு - இவ்வண்ணம்,- அகண்டமும், அகண்டா காரமும், தானல்லா - தானல்லாத, ஆனந்த மாதல் - நிரதிசயானந்த மாதலை, போற்று - யாவரும் துதிக்கி ன்ற, பிரமச் சொரூப சமாதியென்பர் - பிரம சொரூப சமாதியென்று ஆசிரியர் உபதேசிப்பார், அதை - அவ் வனுபவத்தை, சுருதி புகலும் - வேதமுஞ் சொல்லும், வாக்கியமேற்றில் - அவ்வாக்கியங்கொள்ளில், அகம் - நாமே, பிரமம் - பிரமமாகிய, நித்தியம் - நித்தியவஸ்து வாம், அத்தானமெனும் - அவ்விடமென்கிற, இதனை - இச்சானத்தை, இயம்பக் கேண்மோ - சொல்லக் கேட் பாய் எ. று.

(இ - ம்.) சர்வமுந் தாஞக விளங்குதலின் அத்து விதமெனவும் அவ்வத்துவிதமே ஆத்மாவாதலால் அது வே நிரதிசயானந்தமாக விளங்குஞ் சொரூப சமாதி யெனவுங் கூறி, சுருதி வாக்கியப்படி யிதை யடையு மார்க்கத்தையுங் கூறத்தொடங்கினதாம். (௪௦)

(அ. கை.)

வாக்கியப்படி யப்பியாசிக்குஞ் சிரவணுதி யைந் தின் நாமமும் அவற்றிற் சிரவணுதி மூன்றிற்குப் பொ ருளும் இச்செய்யுளிற் கூறுகின்றூர்.

கவி.

இந்தமொழிவழிகேட்டல் சிந்திந்தறெளிதனிட்டை
யின்பங்கூடற்
சந்ததந்தானயிருத்த லைந்தின்முதற்கேள்வியென்ப
தாசான்வார்த்தை
யந்தவசனார்த்தமனத் தாராய்வேசிந்தித்த
லருத்தமியாவுந்
தொந்தமறப்பகுத்துணர்ந்து தெளிவதுவேதெளிவெனவுஞ்
சொல்வர்தாமே.

(இ - ள்.) இந்த மொழி வழி - இம்மகாவாக்கிய மார்க்கமாக, கேட்டல் - வஸ்து நிச்சயத்தைச் சிரவணஞ் செய்தலும், சிந்தித்தல் - அதை மனனஞ் செய்தலும், தெளிதல் - அதை நிதித்தியாசனத்திற் காட்சிப் படுத்திக்கொள்ளலும், நிட்டையின்பங்கூடல் - அதைச் சமாதியில் ஆனந்தமாகப் பெறுதலும், சந்ததந் தானயிருத்தல் - எப்போதுந் தானகவே யிருக்குதலுமாகிய, ஐந்தின் - இவ்வைந்தனுள், முதல் - முதலாவது, ஆசான்வார்த்தை - ஞானசாரியர் உபதேசமே, கேள்வியென்பது - சிரவணமெனவும், அந்த வசனார்த்தம் - அவ்வுபதேச வாக்கியத்தின் அருத்தத்தை, மனத்தாராய்வே - மனத்தின்கண் விசாரித்தலே, சிந்தித்தல் - மனனமெனவும், அருத்தமியாவும் - சர்வார்த்தங்களையும், தொந்தமற - துவந்துவங்கள் நீங்க, பகுத்துணர்ந்து - பிரித்தறிந்து, தெளிவதுவே - தன்னைத் தெளி

வதுவே, தெளிவெனவும் - நிதித்தியாசன மெனவும், சொல்வர் - சத்துக்கள் சொல்லுவார்கள் எ. று.

தாம் ஏ இரண்டும் அசைகள்.

(இ - ம்.) ஞானசாரியர் உபதேசங் கேட்பது சிரவணமும, அச் சிரவணத்தை மனத்தில் ஆராய்ந்து அறிவது மனனமும், அங்ஙனம் அறியும் பொருளை ஐயயந் திரி பின்றித் தெளிந்துகொள்வதே நிதித்தியாசனமுமா மென்பதாம். (சக)

(அ. கை.)

மற்றைய சமாதிமுதல் இரண்டும் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

நேராகத்தோற்றுகின்ற துவிதமறந்தொழியாமை
நிட்டைகூட
லாராலுமறியவொண்ணு வத்துவிதமுங்கடந்தங்
கப்பாலேதுஞ்
சாராதசுகசொரூபமாத்திரமாயிருத்தலது
சாக்ஷாத்காரந்
தூராதிதூரமென நான்மறையின்முடிவுரைக்குந்
தொன்மைத்தாமே.

(இ - ள்.) நேராகத் தோற்றுகின்ற - எதிரே தோற்றுகின்ற, துவிதமறந்து - துவிதபாவனை யற்று, ஒழியாமை - பேரின்பம் நீங்கா திருத்தலே, நிட்டை கூடல் - சமாதியடைதலாம், ஆராலு மறியவொண்ணு-

யாவராலும் அறிதற் கரிய, அத்துவிதமுங் கடந்து - அத்தொய்தமும் நீங்கி, அப்பால்-மேல், ஏதுஞ் சாராத- யாதுஞ் சேரக்கூடாத, சுக சொரூபமாத்திரமாயிருத்த லது - சுக சொரூபமாகவே யிருப்பது, சாக்ஷாத்காரம்- சாக்ஷாத்காரமாம் (இதனை), தூராதி தூரமென - அதீதத்தில் அதீதமாமென்று, நான்மறையின் முடிவு- நான்கு வேதங்களின் அந்தமானது, உரைக்குந் தொன் மைத்தாம் - கூறும் பழைமையதாம் எ. று.

ஏ அசை.

(இ - ம்.) முன் றெளிந்த பொருளிற் சுகோதய மாய் அனைத்தும் வேறுபாடின்றி யவாங் மனோகோசர மாயிருப்பது சமாதியும், அச்சமாதியில் உள்ளபடியே தானே தானுகச் சகசத்தில் விளங்குவது சாக்ஷாத்காரமு மா மென்பதாம். (சஉ)

(அ. கை.)

முன் ஆசியர் உபதேசித்தபடியே சிரவண முதல் ஐந்துபடியும் அப்பியாசித்துத் தேறின ஆரூடன் சக சத்தில் விவகரிக்குஞ் சாக்ஷாத்கார தசையைக் கூறு வான் றொடங்கி, அதன் நாமங்களை இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி. (வேறு.)

சங்கற்பவிகற்பநிர்விகற்பமேசாற்றுங்காலைச்
சங்கற்பந்தன்னின்மூன்றுதகுவிகற்பத்தின்மூன்று
சங்கற்பமாதிநிர்விகற்பத்தின்மூன்றுந்தேரிற்
சங்கற்பவிகற்பநிர்விகற்பமுஞ்சாக்ஷாத்காரம்.

(இ - ள்.) சங்கற்பம் - சங்கற்பமும், விகற்பம் - விகற்பமும், நிர்விகற்பம் - நிருவிகற்பமுமாகிய இம் மூன்றையும், சாற்றுங்காலை - கூறுமிடத்து, சங்கற்பந் தன்னின் - சங்கற்பத்தில், மூன்று - சங்கற்ப விகற்ப மென மூன்றாகும், தகுவிகற்பத்தில் - தகைமையான விகற்பத்தில், மூன்று - சங்கற்ப விகற்ப நிருவிகற்ப மென மூன்றாகும், நிர்விகற்பத்தில், சங்கற்பமாதிமூன்றும் - சங்கற்ப முதலிய மூன்றுமாம், தேரில் - இவ்வொன்பதையும் விசாரித்தறியின், சங்கற்பம் - சங்கற்பமும், விகற்பம் - விகற்பமும், நிர்விகற்பமும் - நிருவிகற்பமுமாக விளங்குவதே, சாக்ஷாத்காரம் - சாக்ஷாத்காரமாம் எ. று.

(இ ம்.) சமாதியிற் பாவனாதீதமே தானாகிய சத்தினிடத்தில் ஸ்புரண ரூபமா யுண்டாயது சித்து. அச்சித்தே சங்கற்பமா யதைச் சங்கற்ப விகற்ப நிருவிகற்ப மெனவும், அவ்வுணர்வின் பரிணமிப்பை விகற்பித்தெழுந்த சத்தே விகற்பமா யதைச் சங்கற்ப விகற்ப நிருவிகற்ப மெனவும், அவைகளின் விகற்பந் தோன்றாது உதயமான ஆனந்தமே நிருவிகற்பமா யதைச் சங்கற்ப விகற்ப நிருவிகற்ப மெனவும், அவைகளின் ஒவ்வொரு தசைக்கும் மும்மூன்றாக்கிய இவ்வொன்பது வகையானும் அச் சச்சிதாநந்த மாகவே விவகரிப்பது சாட்சாத்கார தசையென்பதாம். (சஉ)

(அ. கை.)

சத்தில் உதயமான சித்தினிடமாக விவகரிக்கும் மூன்று தன்மையையும் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

சங்கற்பந்தனிற்சங்கற்பந்தான்கிரியாதிநாடல்
சங்கற்பந்தனில்விகற்பந்தான்றுறவதனின்மீளல்
சங்கற்பநிருவிகற்பந்தானேதானென்றுபேசல்
சங்கற்பமாதிமூன்றுந்தவிர்தலேவிகற்பந்தானும்.

(இ. ள்.) சங்கற்பந் தனிற் சங்கற்பந்தான் - சங்கற்பத்திற் சங்கற்பமாவது, கிரியாதிநாடல் - கிரியை முதலியவற்றில் நாடுதலாம், சங்கற்பந்தனில் விகற்பந்தான் - சங்கற்பத்தில் விகற்பமாவது, துறவதனின் மீளல் - தனிமையிற் றிரும்புதலாம், சங்கற்ப நிருவிகற்பம் - சங்கற்பத்தில் நிருவிகற்ப மாவது, தானே தானென்று பேசல் - தன்னைத் தானாகக் கூறுதலாம், சங்கற்பமாதி - சங்கற்ப முதலிய, மூன்றுந் தவிர்தலே - மூன்றும் நீங்குதலே, விகற்பந்தானும் - விகற்பந்தானும் எ. று.

(இ. ம்.) சுத்த ஞானத்தில் உதயமாய்ப் பகுத்தறியும் அறிவே சங்கற்பத்திற் சங்கற்பமும், அங்ஙனம் பகுத்தறியும் பொருளில் அதீதமாய் நிற்றலே சங்கற்பத்தில் விகற்பமும், அவ்விரண்டினும் இன்புருவமே தானாக நிற்றல் சங்கற்பத்தில் நிருவிகற்பமு

மாகிய இம்மூன்றுஞ் சித்து முதன்மையாக விவகரிக்கும் விவகார மென்பதாம். (சச)

(அ. கை.)

சித்தாயிருந்த சத்து முதன்மையாக விவகரிக்கும் மூன்று தன்மையையும் இச்செயுளிற் கூறுகின்றார்.

கவி.

விகற்பத்திற்சங்கற்பந்தான்மிகுந்துறவாகிநிற்றல்
விகற்பத்தில்விகற்பமந்தவிரத்தியிற்பற்றிலாமை
விகற்பத்தினிருவிகற்பமெய்யுணர்வெங்குமாதல்
விகற்பத்தின்மூன்றுந்தேர்ந்துவிடுதலேநிருவிகற்பம்.

(இ. ள்.) விகற்பத்திற் சங்கற்பந்தான் - விகற்பத்திற் சங்கற்பமாவது, மிகுந் துறவாகி நிற்றல் - மிகவுந் தனித்திருத்தலாம், விகற்பத்தில் விகற்பம் - விகற்பத்தில் விகற்பமாவது, அந்த விரத்தியிற் பற்றிலாமை- அத்தனிமையிற் பற்றற்றிருப்பதாம், விகற்பத்தி னிருவிகற்பம் - விகற்பத்தில் நிருவிகற்பமாவது, எங்கும்- எவ்விடத்தும், மெய்யுணர்வாதல்-உண்மை ஞானமாக விளங்குதலாம், விகற்பத்தின் மூன்றும் - விகற்பத்தின் கணுள்ள மூன்றையும், தேர்ந்து விடுதலே - அறிந்து நீங்குதலே, நிருவிகற்பம் - நிர்விகற்பமாம் எ. று.

(இ. ம்.) சுயஞ் சத்தில் அனைத்திலும் அதீதமாக நிற்றலே விகற்பத்திற் சங்கற்பமும், அவ்வதீதத்திலும் பற்றற்றிருப்பதே விகற்பத்தில் விகற்பமும், அவ்விரண்டிலுஞ் சின்மாத்திரமாக விளங்குதலே விகற்பத்

தில் நிருவிகற்பமுமாகிய இம்மூன்றுஞ் சத்து முதன்மையாக விவகரிக்கும் விவகார மென்பதாம். (சுடு)

(அ. கை.)

சத்துஞ் சித்தும் ஏகமான விடத் துள்ள சுயானந்த முதன்மையாக விவகரிக்கும் மூன்று தன்மையும் இச்செயுளிற் கூறுகின்றார்.

கவி.

*நிருவிகற்பத்திற்சங்கற்பநித்தியானந்தமாத*
*னிருவிகற்பத்தில்விகற்பநிரானந்தமாகிநிற்ற*
*னிருவிகற்பத்தினிர்விகற்பமேநிற்குநீர்மை*
*நிருவிகற்பத்தின்மூன்றுநீங்கலேநிராமயந்தான்.*

(இ. ள்.) நிருவிகற்பத்திற் சங்கற்பம் - நிருவிகற்பத்திற் சங்கற்பமாவது, நித்தியானந்தமாதல் - நித்தியானந்த வடிவமாயிருத்தலாம், நிருவிகற்பத்தில் விகற்பம் - நிர்விகற்பத்தில் விகற்பமாவது, நிரானந்தமாகி நிற்றல் - ஆனந்தாதீதமா யிருத்தலாம், நிருவிகற்பத்தி னிர்விகற்பமே - நிருவிகற்பத்தி னிருவிகற்பமாவது, நிற்கு நீர்மை - சுயமாயிருக்கின்ற° குணங்களாம், நிருவிகற்பத்தின் மூன்று நீங்கலே - நிருவிகற்பத்தின்கணுள்ள இம்மூன்றும் நீங்குதலே, நிராமயந்தான் - சனன மரண துன்பங்கள் நீங் கின நிரதிசயானந்தமாம் எ. று.

(இ. ம்.) தனது சுபாவமான சகசானந்தமே நிருவிகற்பத்திற் சங்கற்பமும், அவ்வானந்தம் அதீதமாய்

நிற்றலே நிருவிகற்பத்தில் விகற்பமும், அவ்விரண்டி னும் முன்னுள்ள நிரதிசயானந்தமாக விளங்குதலே நிருவிகற்பத்தில் நிருவிகற்பமுமாகிய இம் மூன்றும் ஆனந்த முதன்மையாக விவகரிப்பது விவகார மென வும், இவ்வொன்பது வகையானுஞ் சச்சிதானந்தப் பிரமமாக விவகரிக்கினும் அவ்விவகாரம் ஆனந்தோப் பிரமமாக விளங்குஞ் சாட்சாத்காரமே யாமெனவும் உபக்கிரமப்படி யுபசங்காரஞ் செய்தாரென்பதாம். சச

(அ. கை)

இந்தச் சாத்தியன் றெளிவை இச்செயுளிற் கூறு கின்றார்.

கவி. (வேறு.)

இப்படியே பெரியோர்க ளிருக்குமிடத் தஞ்ஞானிக் கின்பமான
மெய்ப்பரிசை மறந்தொன்றை விரும்புதல்போ லிவனிதயம் விரிகின்றாலுந்
தப்பறவே சைதன்னியத் துவக்கான பொருளனுசந் தானத்தோடுஞ்
செப்புமதன் வழித்தான காரியத்தும் விரிதன்மிகத் தெளிவென்பாரால்.

(இ. ள்.) இப்படியே - இவ்வண்ணமே, பெரியோ ர்க ளிருக்குமிடத்து - சத்துக்க ளிருக்குங் காலத்தில், அஞ்ஞானிக்கு - அஞ்ஞானியானவனுக்கு, இன்பமான மெய்ப்பரிசை மறந்து - தனதின்பமாகிய வுள்ள தன் மையை மறந்து, ஒன்றை விரும்புதல் போல் - ஓர்

பொருளை விரும்புகின்றதுபோல, இவனிதயம் - இந்த ஞானியின் மனமானது, விரிகின்றாலும் - சகப் பொருளை விரும்பி விரியினும், தப்பறவே-குற்றங் கெடும்படி, சைதன்னியத் துவக்கான பொருள்-ஞான வடிவமான வஸ்துவை, அநுசந்தானத்தோடும் - அப்பியாசத்தோடும், செப்புமதன் வழித்தான-சொல்லப்பட்டஅம் மார்க்கமான, காரியத்தும் - தொழிலினும், விரிதல் - விரிதலால், மிகத் தெளிவென்பார் - மிகவுந் தெளிவென்று பெரியோர்கள் கூறுவார்கள் எ. று.

ஆல் அசை.

(இ. ம்.) இச் சகச நிட்டையிற் சஞ்சரிக்கின்ற சாத்தியன் தன்மனம் அஞ்ஞானிப்போல வுலக விவகாரத்தினும், தஞ்ஞனைப்போல ஞான விவகாரத்தினுஞ் செல்லினுந் தனது விலாசமாகத் தெளிந்திருப்பனெனச் சத்துக்கள் சொல்வார்க ளென்பதாம். (சஎ)

(அ. கை)

ஞானியின் அநுபவத்தை யஞ்ஞானிக்கு உரைக்கின் அவன் றெளியானென இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

தேகாதி காரியங்க ளெல்லாந்தா னல்லாத
சிற்சொரூப
மாகாய மிருக்கையிலே கூடுமோ விடயமெலா
மானித்தேக

மாகாய மாய்விடுமே யென்பாயே லஞ்ஞானிக்
கமலவாய்மை
யேகானு பூதிசொன்னு லேறாதே தன்விடயத்
திச்சைபோலும்.

(இ. ள்.) தேகாதி காரியங்க ளெல்லாம் - தேக முதலிய காரியங்களனைத்தையும், தானல்லாத - தான ல்லாத, சிற்சொரூபம் - ஞானவடிவம், மாகாய மிருக் கையிலே - தூலதேகமிருக்கும்போது, கூடுமோ - சேருமோ, விடய மெலா மாளில் - விடயங்க ளனைத்துங் கெடின், தேகம் - தேகமானது, ஆகாயமாய்விடுமே - ஆகாயமாகுமே, என்பாயேல் - என்று கூறுவாயாயின், அஞ்ஞானிக்கு - அறிவிலானுக்கு, அமல வாய்மை - நிருமலத்தின் உண்மையான, ஏகானுபூதி சொன்னல்- ஒன்றான அனுபவங் கூறின், தன்விடயத் திச்சைபோலும் - தன்விடயத் தாசைபோல, ஏறாது - ஏறமாட்டாது எ. று.

(இ. ம்.) சடமான அஞ்ஞானிக்குச் சின்மயமான ஞானியின் இலக்கணங் கூறின் எங்ஙனம் விளங்குமென்பதாம். (௪அ)

(அ. கை.)

சாத்தியன் அனுபவிக்கின்ற விடயம் விடயமாகாதென இச்செய்யுளிற் கூறுகின்றார்.

கலி.

பெரியோர்கடாமிருக்குந் தன்மையிலே காக்கிரமாய்ப்
பேதாபேதத்
தரியோரைக் கலவாம லொருவிடயத் தினிலுமன
துறவாகாமற்
பரிவோடு கொடுத்தாலு மருந்துபோ லருந்துவரப்
பான்மையாலே
எரியோடு கலந்தபஞ்சாம் விடயமெலா மவரமலத்
திருப்பர்தாமே.

(இ. ள்.) பெரியோர்கள் - மகான்கள், தாமிருக்குந் தன்மையில் - தாங்க ளிருக்கின்ற சுபாவத்தில், ஏகாக்கிரமாய் - தேகமாய், பேதாபேதத் தரியோரை - பேதாபேதங்களுக்குரியவரை, கலவாமல்-கூடாமலும், ஒரு விடயந்தனிலும் - ஓர்விடயத்திலும், மனதுறவாகாமல் - மன நட்பு வையாமலும், பரிவோடு - அன்போடு, கொடுத்தாலும் - கொடுக்கினும், மருந்துபோல் - அவிழ்தம்போல், அருந்துவர் - புசிப்பார்கள், அப்பான்மையாலே-அத்தன்மையினுல்,விடயமெலாம்-விடயங்களனைத்தும், எரியோடு கலந்த பஞ்சாம் - அக்கினியிற் கூடிய பஞ்சுபோலாம், அவர் - இம்மகான்கள், அமலத்திருப்பர் - நின்மலமான தன்னிடத் திருப்பர் எ. று.

தாம் ஏ இரண்டும் அசைகள்.

(இ. ம்.) அறிஞன் யாவர் கொடுக்கினும் அவ்விடயங்களைத் தற்சொரூபமா யனுபவித்தலின் அக்கினி யனுபவிக்கும் பஞ்சைப்போல அவனிடத்ததாமென்பதாம். (சகூ)

(அ. கை.)

அறிஞனை யிகழக் கூடாதென இச் செய்யுளிற் கூறுகின்றார்.

கவி.

அப்படியே யனல்போல வேதேனு மருந்துவரென்
றறைதல்வேண்டா
தப்பறவே யஞ்ஞானி போற்புசிப்ப னெனவுரைத்த
தகைமையாலே
யொப்புரைத்த தல்லாதிங் குலகிகழப் புசியான்மற்
றுண்டானேனு
மெய்ப்பரிசை யுணர்ந்தாரை யிகழ்ந்தார்க்கு நரகமென்று
விளம்புவாரே.

(இ. ள்.) அப்படியே - அவ்வண்ணமே, அனல்போல - அக்கினிபோல், ஏதேனும் அருந்துவரென்று - யாதெனினும் புசிப்பார்களென்று, அறைதல்வேண்டா, உரைக்கவேண்டுவதின்று, தப்பறவே - குற்றமின்றி, அஞ்ஞானிபோல் - அறிவில்லாதவனைப்போல, புசிப்பனென வுரைத்த - உண்பானெனக் கூறிய, தகைமையாலே - தன்மையினால், ஒப்புரைத்த தல்லாது - உவமை கூறிய தன்றி, இங்கு - இவ்விடத்தில், உலகிகழப் புசியான் - உலகம் நிந்திக்கும்படி யுண்ணான், மற்றுண்

டானேனும் - அங்ஙனம் உண்டானாயினும், மெய்ப்பரி சை யுணர்ந்தாரை - தனக்குள்ள தன்மையை யறிந்த பெரியோர்களை, இகழ்ந்தார்க்கு - நிந்தித்தவர்களுக்கு, நரகமென்று விளம்புவார் - நரகமென்று பெரியோர்கள் கூறுவார் எ. று.

ஏ அசை.

(இ. ம்.) அறிஞன் உலகு இகழும்படியான அநு பவத்தை யனுபவியான். அங்ஙனம் ஓர் போது அனுப வித்தானாயினும் அது பிராரத்த கன்மமெனக் கண்டிரு க்கவேண்டு மல்லாது நிந்திக்கக் கூடாதென வேதங் கூறு மென்பதாம். (௫0)

(அ. கை.)

இந் நூலாசிரியர் தனது ஞானாசாரியாருளை வியந்து அவர் மரபுதோன்ற அவர் நாமத்தை யிச்செய்யு ளிற் கூறுகின்றார்.

கவி.

அற்றைதொறு மாயிரமா யிரம்பிழைகள் செய்தாலு
மடியேன்றன்பாற்
பெற்றதிரு வருட்கடலிற் குளிப்பாட்டித் தாண்மலரும்
பேருச்சூட்டிச்
சொற்றதெலாந் தோத்திரமாய்ப் புனைந்தருளியெனைவளர்க்
தொட்டிலாகி [குன்
றற்றகுரு ராயனெங்கள் விநாயகபா ரதிதமியே
னுள்ளத்தானே.

(இ. ள்.) அற்றைதொறும் - நாடோறும் ஆயிர மாயிரம் பிழைகள் செய்தாலும் - அளவிறந்த குற்றங் கள் செய்தாலும், அடியேன் - நாயேன், தன்பாற் பெ ற்ற - தன்னிடத்தில் அடைந்த, திருவருட் கடலில் - அழகுள்ள கருணா சாகரத்தில், குளிப்பாட்டி - மூழ்கு வித்து, தாண்மலரும் - பாதாம்புயத்தையும் பேறுச் சூட்டி - முடியாகத் தரித்து, சொற்றதெலாம் - அடியேன் சொல்லிய அனைத்தையும், தோத்திரமாய்ப் புனைந்த ருளி - துதியாகத் தரித்து, எனை வளர்க்குந் தொட்டி லாகி - அடியேனை வளர்ப்பதற்கு ஆதாரமாகி, உற்ற - எழுந்தருளிய, குருநாயன் - தேசிகராய (ஞரெனின்,) எங்கள் விநாயகபாரதி - ஸ்ரீ விநாயகபாரதியென்னும் நாமத்தையுடையவர், தமியே னுள்ளத்தான் - அடியே னுள்ளங் கோயிலாகவுடையவன் எ. று.

ஏ அசை.

(இ. ம்.) தொன்றுதொட்டே உயிர்க்குயிராகநின்று எனதுகுற்றங்களனைத்தையும் நீக்கும் முறைப்படி நீக் கிச் சுத்தஞனவிடத்து என்னைத் தனது சொப்பிரகாச மாக்கிக் கொண்ட சங்கராசாரிய சுவாமிகள் மரபினுள் விநாயகபாரதியென்னும் நாமத்தையுடைய எனது ஞா னசாரியாருளைப் புகழ்ந்து அதுவாக விளங்குகின்றே னெனக் கூறினுரென்பதாம். (கூக)

முற்றிற்று.